ஒருமனதுடன் உள்ளத்தின்கியானமான ஸ்வரூபனுகக்கடவாய்.

लक्ष्यालक्ष्यगतिं त्यक्त्वायस्तिष्ठेत्केवलात्मना ।
शिव एवस्वयंसाक्षादयं ब्रह्मविदुत्तमः

లక్ష్యాలక్ష్యగతిం త్యక్త్వా యస్తిష్ఠేత్కేవలాత్మనా ।
శివ ఏవస్వయంసాక్షాదయం బ్రహ్మవిదుత్తమః ॥ ౧౨॥

எவன் ஐக்கிய ஸ்வரூபத்தினுல் லக்ஷியா லக்ஷியகதிகளென்னப்பட்ட கொள்ளுதல் விடுதல் இவைகளை விட்டிருப்பவனே அந்த உத்தம பிரமஞானிதான் பிறத்தியக்ஷ சிவனேயாகின்ருன்.

असंकल्पनशस्त्रेण छिन्नंचित्तमिदंयदा ।
सर्वंसर्वगतंशान्तं ब्रह्मसंपद्यतेतदा ॥

అసంకల్పనశస్త్రేణ ఛిన్నంచిత్తమిదంయదా ।
సర్వంసర్వగతంశాన్తం బ్రహ్మసంపద్యతేతదా ॥ ౧౩॥

எப்பொழுது அசங்கல்பம் என்னப்பட்ட ஆயுதத்தினுல் இந்தமனது சேதிக்கப்படுமோ அப்பொழுதுயெல்லாமானதும் எங்கேயும்வியாபித்திருப்பதும் விகாரமற்றதுமான பிரமஸ்வரூபம் லயப்படுகின்றது.

यत्तुचंचलताहीनंतन्मनोमृतमुच्यते ।
तदेवचतपश्शास्त्रसिद्धांतेमोक्षउच्यते ॥

యత్తుచంచలతాహీనంతన్మనోమృతముచ్యతే ।
తదేవచతపశ్శాస్త్రసిద్ధాంతేమోక్షఉచ్యతే॥ ౧౪

எந்தமனது சலிப்பற்று நிற்குமோ, அந்தமனம் சத்தமென் சொல்லப்படுகின்றது — அதேதபோ நியமத்திலும்-சாத்திர சித்தாந்தத்திலும் மோக்ஷமென்னப்படுகின்றது.

அகதி - 5.

अहंसर्वमिदंविश्वं परमात्माहमच्युतः ।
नान्यदस्तीतिसंविद्यापरमासाह्यहंकृतिः ॥

అహంసర్వమిదంవిశ్వం పరమాత్మాహమచ్యుతః ।
నాన్యదస్తీతిసంవిద్యాపరమాసాప్యహంకృతిః ॥ ౧౧॥

நானே சகலமான இந்த பிரபஞ்சமும் (என்னில் கல்பிக்கப்பட்டதால்) அதிஷ்டானமான வென்னைக்காட்டிலும் அன்னியமில்லை நானேபரமாத்துமா நாசமில்லாத அதிகாரியான கூடஸ்தன், என்னைப்பார்க்கிலும் வேறொன்று மில்லையெனும் எந்த ஞயானமுண்டோ அதுவே-பரம அஹங்காரம், சிரேட்டமான அஹம்பாவம்.

नास्त्येषापरमार्थानेत्येवंभावनयेद्धया ।
सर्वंब्रह्मेतियस्यांतर्भावनासाहिमुक्तिदा ॥

నాస్త్యేషాపరమార్థానేత్యేవంభావనయేద్ధయా।
సర్వంబ్రహ్మేతియస్యాంతర్భావనాసాహిముక్తిదా॥ ౧౦౩॥

மாயையில்லை யென்று பாவனையினால் ஸர்வம் பிரமமே யெனும் அனுசந்தானம் முக்தியைத்தருமென்று பாவிக்கப் பட்டது.

யக்யவாக பகவத்கீதை.

---

சுலோகங்கள்.

स्वस्वरूपानुसंधानान्नृत्यंतंसर्वसाक्षिणं ।
मुहूर्तंचिंतयेन्मांयस्सर्वबंधैःप्रमुच्यते ॥
त्वंवाहमस्मिभगवोदेवतेहंवमस्यापि ।
तुभ्यंमह्यमनंतायमह्यंतुभ्यंचिदात्मने ॥
नमोमह्यंपरेशाय, ननुस्तुभ्यंशिवायच ।
किंकरोमिक्कगच्छामि, किंगृह्णमीत्यजामिकिं ॥
यन्मयापूरितंविश्वं महाकल्पांबुजनायथा,
अंतस्संगबाहिस्संगमात्मसंगच्चयस्त्यजेत्,
सर्वसंगनिवृत्तात्मासमामेतिनसंशयः,
यत्सर्वंसंगनिरमुक्तः परिपूर्णोभवेत्स्वयं॥

స్వస్వరూపానుసంధానాన్నృత్యంతంసర్వసాక్షిణం ।
ముహూర్తంచిన్తయేన్మాంయస్సర్వబంధైఃప్రముచ్యతే ॥

త్వంనాహమస్మిభగవన్ దేవతే హంత్వమస్యపి ।
తుభ్యంమహ్యమనంతాయమహ్యంతుభ్యంచిదాత్మనే ।
నమోమహ్యంపరేశాయ, నమస్తుభ్యంశివాయచ ।
కింకరోమిక్వగచ్ఛామి, కింగృహ్ణామిత్యజామికిం ॥
యత్త్వయాపూరితం విశ్వం మహాకల్పాంబునాయథా,
అంతస్సంగబహిస్సంగమాత్మసంగంచయస్త్యజేత్,
సర్వసంగనివృత్తాత్మాసమామేతినసంశయః,
యత్సర్వంసంగనిర్ముక్తఃపరిపూర్ణోభవేత్స్వయం ॥

ஸ்ரீ யக்கியவராக பகவத்கீதை

ச்லோக தாத்பரியங்கள்-

(1) தன் ஸ்வரூப சந்தானத்துடனே விளையாடுகிறவனும் சர்வசாக்ஷியும் பரமேசுவரனை யென்னை இரண்டு நாழிகை யெந்த முமுக்ஷுயானவன் தியானிப்பானோ அவன் யெல்லா அவித்யோபாதிகளிலிருந்து நீங்கிவிடுவான்-என்றால் தான் நிஷ்டை கூடும்பொழுது தன்னில்தானாக காணப்படுகிறதாகி யெதுவோ அதையே தியானிக்கத்தக்கதாம்.

(2) ஓபகவானே நீயே நானேனென்நான் நீயானாய், (ஆகச்சே) யெங்கும் பரிபூர்ணனை நீயான யெனக்காகவும் சின்மாத்திர ஸ்வரூபனை நானாகிய உமக்காகவும் நமஸ்காரமாகமட்டும்.

(3) பரமேசுவரனை எனக்காகவும் சோபாயமானமான சிவமான உமக்காகவும் நமஸ்காரமாகட்டும். எந்த மாபிரம்மமானயென்றால் பிரளயகாலத்தில்சமுத்திரஜலத்தைப் போல உலகமுழுதும் நிறைந்திருக்குமோ, அப்போர்க்கொத்த நான் யென்னசெய்யக்கூடும், எவ்விடம் போகக்கூடும்-எதைக்கொள்ளக்கூடும், எதை தள்ளக்கூடும், என்று இவ்வண்ணம் செய்யப்பட்ட தன் ஸ்வரூபதியானத்தாலேயே மனிதன் தனக்குள்ளிருக்கும் காமக்குரோத மூகலிய பற்றுகளையும், தன் வெளியிலிருக்கும் மனைவி மக்களுடைய பற்றுகளையும், நான் மனிதனென்னும் ஆத்மஸங்கத்தையும் விடுவானே (அந்த ஆத்மோபாஸனன்) அவன் சர்

வஸங்கபரித்தியாகமனதுள்ளவன் பரமேஸ்வரனான என்னை அடைகின்றான். இதில் யாதொரு சந்தேஹமுமில்லை-எந்த ஸர்வசங்கத்தினால் விடுபட்டவனோ அவன்தானே அகண்ட சச்சிதானந்த ஸ்வரூபனாகின்றான்.

---

## பிரம்ம நாரத ஸம்வாதம்.

### தெலுங்கு பத்திய தாத்பரியம்.

மேன்மை பொருந்திய அகம்பிர்மாஸ்மியெனும் பெரிதான மந்திரரூபமே மனோவியாதிகளைப் போக்கடிக்கும் சாமர்த்தியமுள்ளதாம். அந்த மந்திரமே அமோகமான உபதேசமாகும் அதுவே சர்வங்களை நசிப்பிக்கச்செய்யும். மேலும்மனதின் விகற்பங்களை நீக்கும்படியான நிர்மலமான மந்திரம். இன்னுமந்த மந்திரமஹிமையானது பெரிதான உடல் ரோகத்தையும், சோகதுக்க குரோதங்களென்னும் சத்துருபாசங்களையும், மனதின் தோஷங்களையும் போக்கடித்து அதினாலே மோக்ஷத்தை அடைகிறான்.

---

முதலாவது பக்தியோகம் முற்றிற்று.



# முக்தி சோபனம்.

## 2-வது அத்தியாயம்,

### யோகநிருபண சங்கிரகம்.

### ஸ்ரீ சத்குரவே நம:

கடவுள் வணக்கம்.

"கல்லாலின் புடையமர்ந்து நான்மறையா
றங்கமுதற் கற்ற கேள்வி
வல்லார்க ணால்வருக்கும் வாக்கிறந்த
பூரணமாய் மறைக் கப்பாலாய்
எல்லாமா யல்லவுமா யிருந்ததனை
யிருந்தபடி யிருந்து காட்டிச்
சொல்லாமற் சொன்னவரை நினையாம
னினைந்துபவத் தொடக்கை வெல்லாம்."

ஸகலவஸ்து சமுதாயமாய்த் தோற்றமுள்ள பிரபஞ்சம் நால்வகையோனிப் பிறப்பாகிய எல்லா உயிர்களுக்கும் காரணமாயுள்ளது. இப்பொழுது காரண காரியங்களுக்கு அபேதமென்னும் நியாயத்தால் சித்து ஜடமென்னு மிருவகைப் பதார்த்தங்களுள வென்பதற்கில்லாமல், இருப்பது சித்தே யென்று சொல்லத்தகுதியாயிருக்கின்றது. இது சுருதி, யுக்தி அனுபவங்களுக்கு ஒத்து மிருக்கிறதென்பதற்கு அனுகூல சுருதி முதலானவைகளை இவ்விடத்தில் சில உதகரிக்கப்படும்

வராகோப நிஷத்து.

"சத்தியமான பரபிர்மம் நான். என்னைத்தவிர வேறே யாதொன்றுமில்லை.'

ஷை

"சிவனைக்காட்டிலும் வேறொன்றுமில்லை."

ஐதரேய உபநிஷத்து.

"சின்மாத்திரமாயுள்ள வெறுஞ்சிவனே திகழுவான்யாதுக்கும், முன்மாத்திரமும் வேறில்லை முற்றுமவனே."

சாந்தோக்கிய உபநிஷத்து.

"உலகம் யாவும் உயிர்ப்பலவும் நானே சிறிதும் வேறில்லை."

கேநோபநிஷத்து.

"தீதாக நன்றேயாகச் சிவனலாதில்லை."
"மெய்ப்பரமன் றனையொழிய வேறொருமா
யையுமில்லை."

கூர்மபுராணம்—ஈசுரகீதை.

"ஆதலா லெல்லாமாகி நின்றது மறிவே வேறொன்
றேதிடக் கண்டதில்லை."

பகவற்கீதை.

"இரும்புவன மனைத்திற்கும் வித்துநான்
என்னைப்போக் கியாதுமில்லை."

ஞானவாசிட்டம்.

"ஒருபொருளாம் பிரமமாத் திரமேயல்லா
லுய்யமெனுங் கற்பனைப்பே ரொன்று மில்லை."

திருவாசகம்.

"நீயலால் பிறிதுமற் றின்மைசென்று சென்றணுவாய்த்
தேய்ந்துதேய்ந் தொன்றாந் திருப்பெருந் துறையு
றை சிவனே யொன்றுநீ யல்லை யன்றியொன் றில்லை."

இப்படி யின்னு மனேகங்களுண்டு.

எட்டுவித பிரமாணங்களில், முக்கியமான மூன்று பிரமாணங்களி லொன்றான, சப்த பிரமாணமாகிய சுருதி ஸ்மி

ரிதி புராணங்கள் மேலே சொல்லியபடி உலகமாய்த் தோன்றுவதே பிரமமாகும். மூன்று காலங்களிலும் ஸத்ரூபமாயிருப்பது ஒன்றாகிய பிரமமாதலால், படித்துத் தெரியாத மானிடராய், அந்த பரம்பரையாகப் பேசிவரும் ஜகத்தென்பது எப்பொழுதுமில்லாததாயிருக்கின்றது. இது அத்யந்தா பாவமென்று சொல்லப்படும். மேலும் சாது சங்கத்தினாலேயும் சத்கிரந்த படிப்பினாலேயும், தேர்ந்த மனதுள்ளவர்களாய் சிஷ்டாசார சம்பன்னராய் விளங்கும் மகான்களுக்கு, இந்திரியங்களா லறியப்பட்டதெல்லாம் பிரமமேயாகும். அப்படிக்கில்லாத சாமானியாளுக்கு, பேததிருஷ்டியினால் ஜகத் அன்னியமா யொன்றிருப்பதாய்க் காணப்படும். இப்படிக்கிருந்தும் கானல் ஜலம்போலக் காணப்படும். அனிர் வசனியமான ஜகத்தில் தோன்றும்படியான சித்திர விசித்திர பேதங்கள் அந்தப் பிரமத்தின் சுவரூபமேயாகும். இந்த ஸ்வரூப பேதங்கள் அந்தந்த உபாதிக்குத் தக்கதாய் விளங்கும். அரும்பு முதல் பிரமா பரியந்தம் இந்த சித்பதார்த்தம் சிலதாரதம்மிய பேதங்களுடன் விளங்கிக்கொண்டிருக்கும். அப்படிக்கிருப்பதால் எல்லா ஜீவர்களிலும் மனிதர்களிடத்தில் சித்தானது விசேஷமாய் பிரகாசிக்கும் இந்த மனிதர்களில் கியான யோகீசுவரர்களிடத்தில் அந்த சித்து பூரணமாயும் தானாயும் விளங்கும். அப்படி சித்ரூபமாய் விளங்கும் பிரமம் பரோக்ஷமாயறியக்கூடாததாயும், சுவானுபவத்தா லறியக்கூடியதாயும் வாக்குமனங்களுக் கெட்டாததாயு மிருப்பதால், அப்படிப்பட்ட பரம்பொருளை பிரத்தியட்ச அனுமான உபமானங்களால் நிச்சயித்து உள்ளதுள்ளபடி யுள்ளத்தி லறிவதற்குத் தத்துவஞானிகள் சில உபாயங்களைக் கருணை கூர்ந்திருக்கிறார்கள். அவை நான்குவகைச் சாதனங்களாம்.

அந்தச் சாதன சதுஷ்டய சம்பன்னனே ஞானயோகோபதேசத்துக்கு அதிகாரியாவான்.

கைவல்லிய நவநீதகிரந்தத்தில் சொல்லியபடி சாதனையில்லாமல் எந்தக்காரியமும் முடியாது. ஆகையால் ஞானயோகங்களுக்குச் சாதன சதுஷ்டயம் அவசியம் வேண்டியதாயிருக்கின்றது.

சாதன சதுஷ்டயங்களைவையெனில்.

1. நித்தியா அனித்திய வஸ்து விவேகம்.

சத்தாகிய பிரமம் ஸத்தியமென்றும் மாயாகல்பித ஜகம் மித்தை யென்றும் செவ்வையாய் அறிவது.

2. இஹமுத்திரார் பலயோக விதாகம்.

பூலோக-ஸ்வர்க்கலோக போகங்களை வெறுத்திருப்பது.

3. சமாதிஷட்க சம்பத்தி.

சமம், தமம், திதிக்ஷை, உபாதி, சிரத்தை, சமாதி அவைகளில்

சமம்-உட்கரணங்களான மனம், புத்தி, சித்தம் அஹங்கார மென்னுமிவை, விஷயங்களில் செல்ல வொட்டாமல் தடுத்தல்.

தமம்-பரகரணங்களான செவி த்வக்கு, சக்ஷுஜிவர்க்கம் ஆக்கிருணை-இவை சப்தாதி விஷயங்களில் செல்லவொட்டாமல் மறுத்தல்

திதிக்ஷை-சீதோஷ்ண-சுகதுக்கங்க ளானவைகளில் சமசித்தத்தை யுடைத்தா யிருப்பது.

உபாதி-மெதுவாய்-சர்வகர்ம பரித்தியாகம் பண்ணுதல்

சிரத்தை-குரு-சாஸ்திர-தெய்வங்களிடத்தில் விசுவாசம் உண்டாயிருத்தல்.

சமாதானம் - குரு உபதேசத்திலும் - சாத்திரத்திலும் சந்தேகமில்லாமலிருப்பது.

4. மோக்ஷாபேக்ஷை.

பந்த விமுக்திக்காக ஆசான் கருணையை யெதிர் பார்த்துக் கொண்டிருத்தல்-

மேலே சொல்லிய சாதன சதுஷ்டயங்கள் நான்கும் தவிர சிரவண, மனன, நிதித்யாசங்க ளென்னும் 3-ம் தத்துவம் பதவிசாரணை 1-இந்த 8-ம் ஞான சாதனங்களாகும், மேலும் அந்தர், பஹிர் சாதனங்களென்று 2-விதங்களுண்டு அவைகளில் சாதன சதுஷ்டயங்கள் அந்தரங்க சாதனங்கள் நித்திய,நைமித்திக யாகாதிகர்மங்கள், பகிரங்க சாதனங்கள், ஆனால் பிரமஜிக் வாசனுக்கு அந்தரங்க சாதனங்களே அனுஷ்டிக்கத்தக்க முக்கியமானவைகள்.

---

## யோகம்.

மேலும் ஆத்மானுபவம் விரும்புவோன் சாதன சதுஷ்டய சம்பன்னனாக இருந்தபோதிலும் யோகாப்பியாசமன்றி அந்த ஆத்மானுபவம் சித்திக்கிறதில்லை. அந்த அனுபவம் சித்த விருத்தி நிரோதத்தால் கிடைக்கும். சித்த விருத்தி நிரோதாப்பியாசமே யோகமெனப்படும். எப்போது ஐந்து ஞானேந்திரியங்களும் மனதோடு (ஆத்மாவில்) நிலைக்கின்றனவோ, புத்தியும் (தனதுவியாபாரத்தில்) சேஷிக்கிற தில்லையோ, அந்த அவஸ்தையை யோகிகள் பரமகதி யென்றுகூறுவர். அதனை யோகமென்று மதிக்கின்றனர் எப்போது ஸ்திரமாகிய இந்திரியதாரணையில் பிரமாதமில்லாதவனாகின்றானோ அப்போது யோகத்தில் பிரவிருத்தன் ஆகின்றான். (ஆதித்திய புராணவசனம்) எப்படியென்றால் யோகத்தினால் கியானம் உண்டாகின்றது. யோகமென்பது என்னிடத்தில் ஒரே மனதாயிருத்தல். (ஸ்காந்த புராணவசனமெப்படியென்றால்) ஆத்ம ஞானத்தினால் முக்தியுண்டாகின்றது அந்தஞானமும் யோகமின்றி யுண்டாகிறதில்லை. அந்த யோகமும் வெகுகால அப்பியாசத்தினாலேயே சித்திக்கின்றது. அந்தயோகம்

அப்பியாசயோகமென்றும் இராஜயோகமென்றும் இரண்டு விதங்களுண்டு. அவைகளில் அபக்குவனுக்கு அப்யாசயோகமென்னும் பிராணயாமும் பக்குவனுக்கு இராஜயோகமும் சொல்லப்பட்டிருக்கின்றன.

இதுவுமல்லாமல் இந்த யோகத்தில் மந்திர, லய, ஹட இராஜ யோகங்களென்று நான்குவிதங்களுண்டு மேலுமிதில் பூர்வாங்கமென்றும் உத்தராங்கமென்றும் இரண்டு அங்கங்களுண்டு.

பூர்வாங்கம் யம நியம ஆசனபிராணயாமங்கள்-உத்தராங்கம் பிரத்தியாஹார-தியான-தாரண-சமாதிகள் இவை இரண்டும் சேர்ந்து அஷ்டாங்க யோகமென்னப்படும்.

(இன்னும்-நிர்குணபஞ்சதச யோகங்களுமுண்டு. அவை பின்னால் விவரிக்கப்படும்.)

மேலே சொல்லிய மந்திர லய ஹடயோகங்களுக்கு வேறு நாமங்களுண்டு அவைகள்.

மந்திரயோகம் பிராகிருதமென்றும், லயயோகம் வைகிருதமென்றும், ஹடயோகம் கும்பகமென்றும் சொல்லப்படுகிறது.

அவைகளில், மந்திரயோகம் நான்கு வகையுள்ளது அவை, அஜபம் ஜபம் கிரியை பக்தி யென்னப்படும்.

அஜபமானது மூலாதார ஷட் கமலதேவதைகளுக்கு 21600 கலைகளை அஜபாகாயத்திரி மூலமாய்ப் பகுத்து ஜபித்தல். இது ஆசான்மூலமா யறியத்தக்கது. ஜபமாவது, அஷ்டகருமங்களுக்கு வேண்டிய யந்திர விக்கிரகாராதனை, கிரியைகளைச்சேர்ந்த மந்திரத்தை உச்சரித்தல்.

கிரியை, நித்திய நைமித்திய முதலிய கருமங்களில் (ஷண்மதஸ்தர்களும்) வேதத்தில் சொல்லியபடி மந்திரங்களை வாயால் சொல்லிக்கொண்டு அவைகளுக்கான கருமங்களை விதியின்படி கைகளால் செய்தல்.

பக்தி-இது பண்டித பாமரர்களுக்கு முக்கியமானது அந்தப் பக்தி ஒன்பது வகைப்படும் அவை சிரவணம், கீர்த்தனை, ஸ்மரணை, சேவை, அர்ச்சனை, தாஸியம், வந்தனம், சகியம், ஆத்மநிவேதனை யெனப்படும். இனி இந்நவவிதபக்தி விவரிக்கப்படுகிறது.

1. சிரவணம்-பலவகைகிரந்தங்களில்சொல்லிய ஷண்மத தெய்வங்களாகிய சிவகேசவாதிகளின் மஹிமாதி சயங்களை சிரத்தையோடு கேட்பது. மேலும் தெய்வத்தைப்போன்ற மஹான்களின் சரித்திரங்களை மிகவும் பக்தியோடு விசாரித்தல்.

2. கீர்த்தனம்-ஹரிஹராதி தெய்வங்களை பரிசுத்த மனத்தோடு தொழுதல் பாடுதல் வாத்தியங்களோடு பஜனைசெய்தல்.

இப்படியே மகான்களையும் துதிக்கலாம்.

3. ஸ்மரணை-பகவந்நாமங்களை மந்திரங்களோடு ஏகாந்தமாய் மனதில் உச்சரித்தல். பெரியோர்களை இப்படியே ஸ்மரிக்கக்கூடும்.

4. சேவை-பாவிக்கக்கூடிய தேவதாரூபங்களை மிகவும் தாழ்ந்து சேவித்தல்.

இந்த சேவை நல்லமனதால் (பெரியோர்களை) செய்தல் உத்தமம்.

5. அர்ச்சனை-இஷ்டதெய்வங்களை மனதாலும் கைகளாலும் பத்திரபுஷ்பங்களைக்கொண்டு பூசித்தல் மகான்களையுமிப்படியே பூசிப்பது நன்று.

6. தாசியம்-இந்த பக்தி நேராய்கடவுளுக்குச் செய்வது கூடாதபடியினாலும் பகவத் பக்தியை அடியார்கள் ஸ்வருபிகளான பெரியோர்களைத்தேகாபிமானங்கள் விட்டு மிகவும் தாழ்ந்து அடிமைசெய்தல்.

7. வந்தனம் மேலேசொல்லிய தெய்வங்களையும் அடியார் பாகவதாள் ஆசான் முதலிய பெரியவர்களையும் சாஷ்டாங்கமாக சேவித்தல்.

8. சகியம் பகவத்கீதையில் 18-வது அதியாயத்தில் ஸ்ரீகிருஷ்ணபகவான் சொன்னபடி ஸர்வதர்மம் பரித்தியஜ்ய என்னும் சுலோகத்தின் பொருள் பிரகாரம், சர்மதர்மங்களான பற்றுக்களைவிட்டு தெய்வமே நீயேகதி யென்றிருத்தல். ஆசானிடத்திலும் இந்த பாவனையே கொண்டிருத்தல் நன்மை.

9. ஆத்மநிவேதனை-ஏகாக்கிரசித்தனாய் - தன்னைபகவானுக்கு அர்ப்பணஞ்செய்து ஆனந்தத்தோடிருத்தல் அப்படியே ஆசானிடத்தில் பொருளாவி காயம் மூன்றையும் தத்தஞ்செய்து சுதந்திரமற்றிருத்தல். இந்த நவவிதபக்தி அதிகாரிபேதங்களை யொட்டிச்சொல்லியது, இதைக்காட்டிலும் பாரமார்திகபக்தி வேறேயுண்டு.

### பாரமார்திக பக்தியாவது.

வேதோபநிஷத்துக்களில் சொல்லிய மகாவாக்கியங்களின்படி அந்தப் பரப்பிரமமே தானகையினாலே தனக்கன்னியமாய் யாதொருபதார்த்தமுமில்லை யென்று, சற்குருவினால் செவ்வையாக அறிந்து, அந்த அநுசந்தானத்திலேயே பிரியமுண்டானவனாய் பரிபூர்ணானந்தத்தில் மூழ்கியிருப்பதே பாரமார்திக பக்தியென்னப்படும்.

### லயயோகமாவது.

பிந்து களா சம்யோகத்தினாலுண்டான நாதலீயமென்பது லயயோகமென்னப்படும் மேலும் அனாகத சக்கிரத்தில் ஓயாமல் சப்தித்துக்கொண்டிருக்கும் தசவிதபிரணவநாதங்களை யறிந்து பத்தாவதுநாதம் லீனமாகுமிடத்தில் பிராணா க்ரத்திலிருக்கும் சித்களாதர் சினத்தில் மனோலீனமாகுதலே லயயோகமென்று சொல்வார்கள் இந்த யோகம் குருசிஷ்யா

ளுக்குள் அனுபவ பூர்வமாகத்தெளிய வேண்டிய கோபிய மான விஷயமாதலால் விசேஷமாய் இவ்விடத்தில் எழுதக் கூடியதாயிருக்கவில்லை.

## ஹடயோகமென்பது.

யோகானுகூலமான கிருஹநிர்மாணஞ் செய்துகொண்டு அந்த யோகத்தில் தெளிந்த குரு சன்னிதானத்திலவர் சொற்படி காயசித்தி நிமித்தமான ஸ்நானபான ஆஹாரநியமங் ளும் ஔஷதசேவையுடன் சித்தசுத்தியோடு கூடிய குருபக்தி யுண்டானவனாய் அவர்உபதேசக்கிரம ஆசனபிராணயாமாதிக ளால் அட்டமாசித்திகளடையப்படும். மேலே சொல்லிய ஹட ராஜயோகங்களில் எதை அப்பியசிக்க வேண்டியதாயிருந்த போதிலும் யோக பூர்வாங்கங்களாகிய-யம-நியமஆசன பிரா ணயாமங்கள் கட்டாயமாய் அப்பியசிக்கவேண்டியனவாயிரு க்கின்றன.

ஷை பூர்வாங்கங்களில் - யம - நியமாதிகள் விவரிக்கப்படு கின்றன.

யமம் என்பது 5 விதங்கள்-அவை.

அஹிம்சை, சத்தியம், அஸ்தேயம், பிரமசரியம், அபரி கிரகம்.

1. அஹிம்சை. எந்த உயிருக்கும் மனதிற்கும் காயத் திற்கும் பாதையுண்டாக்காம லிருப்பது.

2. சத்தியம். கண்டதும் கேட்டதும் உள்ளது உள்ள படி பெரியோர்களோ டுரைத்தல்.

3. அஸ்தேயம். எப்படிப்பட்ட கஷ்டதசை வந்தபோ திலும் அன்னியர்கள்பொருளை யபகரிக்காம லிருப்பது.

4. பிரமசரியம். பாலியம் முதல் பெண்டுகளைச் சேரா மலிருப்பது.ருதுகாலங்களின் மாத்திரம் பாணி

கிறஹணம் பண்ணின பெண்சாதியுடன் கூடுகி றது பிரம சரியமென்பதும் பெரியோர்கள் மதம்.

5. அபரிக்கிரகம் - அன்னியர் கொடுக்கும் பொருள் களை வாங்காமல் சிஷ்யர்கள் பக்தி பூர்வகமாகக் கொடுப்பதை மாத்திரம் அங்கிகரித்தல்.

நியமமும் 5-விதமாகும்.

சவுசம் தபம் சந்தோஷம் சுவாதியாயம் ஈசுவரபிரணி தானம்.

1. சவுசம் - இது வெளி உள் என்று இரண்டுவிதங்க ளுண்டு. வெளி சுத்தி-ஜலத்தினாலேயும் மண்ணி னாலேயும் திரேகத்தைக் கழுவிச் சுத்திசெய்தல். உள்சுத்தி காமகுரோதங்களை யடக்கி மனதை பரிசுத்தப்படுத்துவது.

2. தபம்-இது காயகவாசக மானசமென்று 3 விதங் கள் காயகமேன்பது குருதேவ பிராமணாளைப் பக்தியுடன் பூசித்தல். திரேகசுத்தியாய் வைத் துக் கொண்டிருத்தல் வணங்கியிருத்தல் பிரம சரியம். அஹிம்சை எந்த உயிருக்கும் தீங்கு செய்யாமை இது காயக தபசு.
வாசகதபம் மனதுக்குச் சந்தோஷகரமாயும் சத்தியமாயும் கேட்பதற்கு இன்பமான வார்த் தைகளும் வேதமந்திரங்களை படிக்கிறதும் வா சக தபசு என்னப்படும்.

மானசதபம் சொல்தவறாமை மனோ நிக்கிரகம் இவைகளால் மனது சுத்தியாயிருப்பது.

3. சந்தோஷம்-பேராசைப்படாமல் தைவச்செயலா ய்க்கிடைத்த திரவியத்தோடு இல்லற சுபாசுபங் களை நழுவவிடாமல் நடத்திக்கொண்டு திருப்தி யடைந்திருத்தல்.

4. சுவாதியாயம்- இது 3-விதம் வாசகம் உபாம்சு மானசிகம்.

வாசகம் இதராள் கேட்கும்படி வாசித்தல்.
உபாம்சு அன்னியர்கள் கேளாமலிருக்கும்படி படித்தல்.

மானசிகம் எழுத்துகளை விடாமல் மனதிலேயே ஜபித்தல்.

5. ஈசுவரபிரணீதானம்-இது இரண்டு விதங்களுண்டு. சாமானியமாய் உலகத்தார் விக்கிரகங்களைப் பக்தியுடன் பூஜிக்குதல் ஆனால் பண்டிதாள் தேகமே கோயிலென்றும் ஜீவனே தேவனென்றும் அஞ்ஞானாதிகளென்னும் நிர்மாலியங்களை போக்கி (ஸோஹம்) அந்த பரம்பொருளே நானென்றும் பாவனை பூசைசெய்தல் இதுவேத சுருதியில்சொல்லியபடி இனி யோகாசனங்கள் விசேஷமாய் விவரிக்கப்படும்,

சுபமஸ்து ஓம்தத்ஸத்.



உ

சிவமயம்.

# யோகாசனங்கள்.

---

## சுவஸ்திகாசனம்.

முழுந்தாளுக்கும் தொடைக்கும் மத்தியில் இரண்டு பாதங்களையும் வைத்துக் காயம் நிமிர்ந்து செவ்வையாய் உட்கார்ந்திருப்பது சுவஸ்திகாசனம்.



இங்கே முழுந்தா ளென்னுஞ்சொல்லால் முழுந்தாளைச் சம்பந்தித்துள்ள கணைக்கால் சொல்லப்படுகிறது. தொடைக்கும் கணைக்காலுக்கும் இடையாகிய முழுந்தாள் மத்தியில் இரண்டு பாதங்களையும் வைத்துக்கொண்டு யோகிகளிருப்பதுதான் இப்படி ஸ்ரீதரரால் சொல்லப்பட்டது.

---

## கோமுகாசனம்.

இடது பிருஷ்ட (பின்) பாகத்தில் அதாவது சம்பிரதாயத்தால் கடியின் கீழ்பாகத்தில் வலது பர (கா) ட்டையும் அப்படியே வலது பிருஷ்ட பாகத்தில் இடது பரட்டையும் செவ்வையாய் சேர்க்கவேண்டியது.

மேல்சொல்லிய ஆசனம் மூலபந்தத்தாலே அபானசித்தியடையச்செய்வதோடு பகந்தர வியாதியை போக்குகின்றது தௌதி நௌலி கிரியா சித்தியும் மிகவுமளிக்கின்றது.

---

## வீராசனம்.

ஒருபாதத்தை ஒருதொடையிலும் மற்றபாதத்தில் வேறு தொடையையும் வைத்தல். அதாவது வலது பாதத்தை இடது தொடையிலும் இடது பாதத்தை வலது தொடையிலும் வைத்தல்.



## கூர்மாசனம்.

இரண்டுபரடுகளினலும் குதத்தை நிரோதித்து தடுத்து இரண்டு முழந்தாள்களையும் பூமியில் வைத்து நிமிர்ந்து செவ்வையாக இருத்தல்.

இந்தக் கூர்மாசனம் என்பது வாததோஷங்களை போக்குகின்றது.

## குக்குடாசனம்.

தொடைகளின்பேரில் மேல் நோக்கிய பாதங்களாகவைக்கும் பதுமாசனத்தைச் செவ்வையாகச் சேர்த்துக்கொண்டு, முழந்தாளுக்கும் அதாவதுமுழந்தாளுக்கடுத்தகணைக்காலுக்கும் தொடைக்கும் மத்தியில் இரண்டுகைகளையும்நுழைத்து, பூமியிற் செவ்வையாய் நிறுத்தி மேலெழும்பி இருத்தல் பதுமாசனம் போன்ற குக்குடாசன மெனப்படும்.



## உத்தானகூர்மாசனம்.

மேல்சொல்லிய குக்குடாசன பாதத்திலிருந்துகொண்டு இரண்டு புஜங்களாலும் கழுத்தை நெருக்கிக்கூர்மத்தைப்போல் உத்தானம் (ஒட்டியிருத்தல்) எதினுலுண்டாகிறதோ அதுவே-உத்தான கூர்மாசனம்.



---

## தனுராசனம்.

கைகளால் இரண்டுகாற் பெருவிரல்களையும் பிடித்து, காது வரையிலும் வில்லைப்போல் இழுக்கவேண்டும் அதாவது பெருவிரலை பிடித்திருக்கும் மற்றொருகையை காதுவரையிலும் இழுக்கவேணுமென்று பொருள். இந்த தனுராசனம் சோம்பல்-கபம், மலச்சிக்கல் இவைகளை நீக்குகின்றது:



## மச்சேந்திராசனம்.



இடது தொடையின் மூலத்தில் வைக்கப்பட்ட வலது பாதத்தை (சம்பிரதாயத்தால் பின்புறமாகச்சென்ற இடது கையினால் குதியின் மேற்பாகத்தைப் பிடித்துக்கொண்டு வலது முழந்தாளுக்கு வெளியில் வைக்கப்பட்டிருக்கும் இடதுபாதத்தை (இடது முழந்தாளுக்கு வெளியிற் சுற்றிய வலது கையினால் இடதுகாற் பெருவிரலை) பிடித்துக்கொண்டு இடது பக்கம் பின்புறமாய் முகமிருக்கும்படி திரும்பிய அங்கமாய் இருக்கவேணும்.

மேல்படி ஆசனம் கடூரமான ரோகங்களை போக்க அஸ்திரம்போன்றது. மேலும் ஜடாக்கினி விருத்தியாகும் குண்டலினி விழிக்கச்செய்யும்.

---

## மச்சிமதானு ஆசனம்.



பூமியில் தண்டவடிவமாக இரண்டு குதிகளையும் சேர்த்து, பாதங்களை நீட்டி, கைச்சுட்டு விரல்களால் காற்பெருவிரல்களைப்பலமாக இழுத்து, (முழந்தாளின் கீழ்பாகம் பூமியிற் றெழாதவண்ணம்) பிடித்துக்கொண்டு முழந்தாளின்மேல் நெற்றியை வைத்துக்கொண்டிருத்தல்.

இந்த ஆசனம் பிராணனை பச்சிமமென்னும் சுழுமுனைமார்க்கமாய் போகச்செய்கின்றது. ஜடாக்கினியையும் விருத்தி செய்கின்றது. உதரத்தில் மெலிவையும் ரோகமில்லாமையும் செய்கின்றது.

## மயூராசனம்.



விரல்களை விரித்து இரண்டு கைகளையும் பூமியிலூன்றி நாபியினிருபக்கங்களிலும் முழங்கைகளை வைத்து உயர்ந்த ஆசனமாகத் தண்டத்தைப்போல எழும்பி நிற்றல்.

இது குன்ம, ஜலோதரமுதலிய ரோகங்களைத்தீர்க்கும். வாதபித்த ஆலசியாதிகளைக் கண்டிக்கும். ஜடராக்கினியையுண்டாக்கும் அதிக போஜனத்தை ஜீர்ணம் செய்யும்.

## சவாசனம்.

மரித்த சரீரத்துக்குச்சமமாக முதுகு பூமியிலொட்டியிருக்கும்படி நித்திரையிற் போலப்பொருந்தியிருத்தல்.

இந்த ஆசனம் ஹடாப்பியாசத்தாலுண்டாகும் இளைப்பைத்தீர்ப்பதுந்தவிர சித்தவிச்ராந்தியைத் தரும்.

மகேசுவரரால் 84 ஆசனங்கள் லக்ஷணங்களுடன் சொல்லப்பட்டிருக்கின்றன. அவைகளில் முக்கியமானவை.—உலகத்திலிருக்கும் ஜீவர்களெவ்வளவோ அவ்வளவு ஆசனங்களிருக்கின்றன. 84 லக்ஷங்களில், லக்ஷத்துக்கொன்றாக, ஆசனங்கள் விவரிக்கப்பட்டன. அவற்றில் முக்கியமானவை 4 ஆசனங்கள்.

சித்தாசனம் - பதுமாசனம் - சிம்ஹாசனம்-பத்திராசனம். இந்த 4-ல் மேலானது சித்தாசனம்.

சிவசங்கிதையில் சொல்லப்பட்ட சித்தம்-பதுமம்-உக்கிரம், சுவஸ்திகம் 4-ல் உக்கிராசனம். பச்சிமதானவாசனத்தை பதுமாசனத்தை சுபாசன மெனப்பட்டது. அவைகளில் சித்தாசன பதுமாசனமென்னும் இரண்டும். கிருகஸ்தருக்குகூடினும் பதுமம்-கிரகஸ்தருக்கும் சித்தம் மைத்தவர்களுக்கு முக்கியமென்னப்பட்டது.

---

## மச்சேந்திர சித்தாசனம்.

குதத்திற்கும், உபஸ்தத்திற்கும். மத்தியபிர தேசமாகிய யோனிஸ்தானத்தை இடது காலின் பாதமூலத்தால் அழுத்தி, வலது பாதத்தை உபஸ்தத்திற்கு மேற்பாக (இலிங்க) த்திற்றிடமாக அழுத்தவேண்டும். இருதயத்தில் மோவாய்க்கட்டையைச் செவ்வையாக நிறுத்தி (மோவாய்க்கட்டைக்கும் இருதயத்திற்கும நாலங்குலமிடை யிருக்கும்படி செய்து என்பது இரகசியம்) இந்திரியங்களை விஷயங்களினின்றும் தடுத்து அசைவற்ற பார்வையாய் புருவமத்தியில் பார்க்கவேணும்.



---



## மதாந்திர சித்தாசனம்.

உபஸ்தத்திற்கு மேல்பாகத்தில் (இலிங்கத்தின்மேல்) இடது பரட்டைச்சேர்த்து அப்படியே மூக்கியமாகிய இடது பாதத்தின்மேல் வலது பரட்டைச்சேர்த்து இருக்கவேண்டும்.

---

## மேற்படி சித்தாசனத்தின் மதபேதங்கள், நாமதேயங்கள்.

### சித்தாசனம்.

இடதுகாற் பரட்டை யோனிஸ்தானத்தில் சேர்த்து வலதுகாற் பரட்டை உபஸ்தத்தின்பேரில் வைத்தல்.

### வஜ்ஜிராசனம்.

வலதுகாற் பரட்டை யோனிஸ்தானத்தில் வைத்து இடதுகாற் பரட்டை உபஸ்தத்தின்பேரில் வைத்தல்.

## முக்த்தாசனம்.

வலதுகாற் பரடு இடதுகாற் பரடு இரண்டையும் மேலும் கீழுமாகச் சேர்த்து யோனிஸ்தானத்தில் வைத்தல்.

## குப்தாசனம்.

மேலுங்கீழுமாகச் சேர்க்கப்பட்ட இரண்டுபரடுகளையும் உபஸ்தத்தின்மேல் வைத்தல் இயமங்களில் மிதாகாரமும் நியமங்களில் அஹிம்சையும், மேன்மை பொருந்தினதுபோல் எல்லா ஆசனங்களிலும் சித்தாசனமே முக்கியமென்றது சித்தர்களின் அபிப்பிராயம். இந்த சித்தாசனம் சித்தித்தால் பிராணவாயுவு கேவல கும்பகத்தில் கட்டுப்படும். அப்படிகட்டுப்படாமல் மற்றஆசனங்களால் பிரயோசனமிராது. ஆசனங்களில் சித்தாசனமும், கும்பத்தில் கேவல கும்பமும், முத்திரையில் கேசரிமுத்திரையும் லயத்தில் நாதமும் சிரேஷ்டமானவை.

---



## பதுமாசனம்.

செவ்வையாகவைத்துப் பின்புறமாய் விதியோடு இரண்டு கைகளாலும் இரண்டு கால் பெருவிரல்களையும் பிடித்துக் கொண்டு இருதயத்திற்குச் சமீபத்தில் (நாலங்குலம் இடை யிருக்கும்படி )மோவாய்க்கட்டையை வைத்து நாசிநுனியைப்பார்க்கவும் இதினல் யோகம் செய்பவர்களுடைய வியாதிகள் நீங்கும்.

## மச்சேந்திர பதுமாசனம்.

இரண்டு (புறங்கால்களையும் பிரயத்தினத்தால் தொடையின்பேரில் சேர்த்து, தொடையின் மத்தியில் இரண்டு கைகளையும் பொருந்தச்செய்து அதன்பின் பார்வையைநாசிநுனியில் நிச்சலமாக (அசைவில்லாததாக)·சேர்த்து முன்பறகாலினிருபுறத்திலிருக்கும் மூலத்தில் நாவினல் ஸ்தம்பித்து மார்

பில் மோவாய்க்கட்டையை வைத்து, மெல்ல மெல்லவாயுவை யெழுப்புதல்சகலவியாதிகளையும் நாசப்படுத்தும்.

இந்த ஆசனம் புண்ணிய புருஷாளாலடையத்தக்கது மேல்சொன்ன ஆசனம் பிராணாயாம பேதத்தால் வேறுவிதமாதுஹடயோகப்பிரதீபிகையில் சொல்லப் பட்டிருக்கிறது அதைபார்த்தால் சங்கதி செவ்வையாய் விளங்கும்.

---



## சிம்மாசனம்.

பரடுக ளிரண்டையும் பீஜத்திற்குக்கீழ்பாகத்திலுள்ள நரம்பின் இருபக்கங்களிலும் சேர்க்கவேண்டும் அதாவது வலதுபுறத்தில் இடது பரட்டையும் இடது புறத்தில் வலது பரட்டையும் சேர்க்கவேணும்.

## இதுவுமது (வேறுவிதம்)

முழுந்தாளின்மேலி ரண்டு கைகளையும் நன்றாய் பொருந்தும்படியாக வைத்து, கைவிரல்களை செவ்வையாய் விரித்து, வாய்திறந்து நாக்கை நீட்டிக்கொண்டு ஏகாக்கிர சித்தனாய் நாசிநுனியைப் பார்க்கவேணும். யோகிகளால் புகழத்தக்க ஆசனங்களில் உத்தமமானது இந்த சிம்மாசனம் இது மந்த நிரயங்களை போக்கும்.

## பத்திராசனம்.

பீஜத்தின்கீழ் பாகமாகிய நரம்பி னிருபக்கங்களிலும் காற்பரடுகளைச் சேர்க்கவேணும் அதாவது இடது புறத்தில் இடது பரட்டையும் வலதுபுறத்தில் வலது பரட்டையுஞ்சேர்க்கவேணும்.

இதுவுமதுவேறுவிதம்.

## கோரக்ஷாசனம்.



இருபக்கங்களின் சமீபத்திலுள்ள இரண்டு பாதங்களையும் இரண்டு கைகளால் பலமாகச்சேர்த்து (ஒன்றோடொன்று நெருங்கிய விரல்களுடையதும் வயிற்றோடொட்டியதுமாகிய கைகளாற் கட்டிக் கொண்டிருக்கவேண்டும்.

இது சகல வியாதிகளையும் போக்கும்படியான பத்திராசனமாகும். யோகசித்தர்களிதை கோரக்ஷாசன மென்பார்கள்.

---

## உருத்திரயாமிளம் ஹடரத்திநாவளி முதலிய வேறு கிரந்தங்களின் ஆசனங்கள்

### வல்லரி.

சமமாக பதுமாசனத்திலிருந்துகொண்டு அப்பாதங்களையும் தொடையையும் ஒட்டி முழங்கைகளை வைத்து, இரண்டு கைகளையும் கோர்த்து சிரசின்பேரில் வைத்து மோவாய்க்கட்டையை மார்பில் பொருந்தச்சேர்த்து வாயுவை நிரோதித்து ஏகாக்கிரசித்தமாயிருக்கவேணும். இந்த ஆசன அப்பியாசனத்தினால் திரேகத்திற்கு எவ்வித பாதையுண்டானால் இதை விடவேணும் இது உக்கிரசுரங்களையுண்டாக்கும் இதினால் ஜடராக்கினி அதிகப்படும்.

### விருச்சிகம்.

இரண்டு கைகளையும் பூமியிலூன்றி இரண்டு முழங்கைகளையும் விலாப்பக்கத்தில் சேர்த்து, மோவாய்க்கட்டையைக் கீழேவைத்து, தேளின் கொடுக்குப்போன்றதாக இரண்டுபாதங்களையும் சிரசின்பேரில் வைத்தல்.

## குப்ஜிகம்.

பாதங்களை மூலத்தில் மாரிவைத்து திரியக்[மிருகத்தைப்] போலக் கொஞ்சம் குனிந்து முழங்காலில் தலையை வைத்துக் கொண்டிருத்தல். இதினால் அக்னி அதிகரிக்கும்.

## பாரிசு லோபாதாசனம்.

சமானமாய் பூமியில் படுத்துக்கொண்டு இரண்டு கைகளையும் இரண்டுவிலாக்களினிடையாகிய முதுகிற்சேர்த்து ஒன்றையொன்றாற் செவ்வையாய் பிடித்துக்கொண்டிருத்தல்

---

## யோகாசனம்.

முழங்காலுக்குக்கீழ் யோகபட்டையைச்சேர்த்து இரண்டு பாதங்களையும் பூமியில் அல்லதுதோளின்மேல்வைத்து இரண்டு முழங்கைகளையும் தொடைகளுக்கு மத்தியில் வைத்து இரண்டு கைகளையும் கன்னத்திற் சேர்த்திருத்தல் யோகாசனமெனப்படும். குதத்தை பரடுகளால் அழுத்தி நேராக நிமிர்ந்திருத்தலையும் யோகாசனமென்பார்கள்



---

## கபாலாசனம்.



தலை கீழாயிருத்தலாகிய விபரீதகரணியைக் கபாலாசனமென்றும், அதோ முகாசனமென்றும், கராசனமென்றும் கூறுவர்-இந்தக் கராசனத்தால் திரேகசிரமம நீங்கும் இதையே விடாமலப்பியாசிக்க-விஷபாதைகளும் நீங்கும்.



### டிட்டி பாசனம்.

கைகளை யூன்றி இரண்டு பாதங்களையும் சிரசின்மேரில் வைத்துப் பின் பாதத்தை யுயர்த்துதல்.

---

### பூர்வதனுராசனம்.

கால் விரல்களைமடித்து பூமியிலூன்றிக் கடிதடங்களைப்பரடுகளில் வைத்துச் சிரசைக்கைகளாலும் இடையை முழங்கைகளாலும் அழுந்தப்பிடித்துக்கொண்டு இடுப்பு நிமிர்ந்திருத்தல்.

---

### அர்ப்ப காசனம்.

இரண்டு பாதங்களையும் பூமியில்வைத்துக் கடிதடங்களை பூமியில் வைத்தாவது, வைக்காமலாவது, முழந்தாள்களின் மேரில் சிரசைவைத்து முழந்தாள்களை இரண்டுகைகளாலும் சுற்றி பிடித்துக்கொண்டிருத்தல்.

---



### சாமதகஞசனம்.

நுனிவிரல்களை பூமியிலூன்றிமுழந்தாள்களைக் கீழூன்றாமல் குதிகளை யோனியிற் பொருத்தி ஹம்சகண்டத்தின்மேரில் கைகளை யூன்றிப் புருவநடுவைப்பார்த்திருத்தல்.

### கேசரியாசனம்.

பீஜத்தின் கீழ்ச் சீவனியிடத்துப் பரட்டைவைத்து முழங்கையை முழந்தாளில்வைத்து அங்குலியை விரித்து நாசியைப் பார்த்திருத்தல்.

### சோபாசிரயாசனம்.

யோகபட்டை சேர்த்திருத்தல்.

### பரியங்காசனம்.

பச்சிமதான வாசனத்தைப் பரியங்கமென்பதோடு முழந்தாள்களில் கைகளை நீட்டிச் சயனித்தலையும் பரியங்காசனமென்பார். சிலர் வீராசனத்தைப் பரியங்காசனமென்றுசொல்லுவார்.

---



### பத்ராசனம்.

பிருஷ்ட்டத்தி லிரண்டு பாதங்களையும் வைத்துப் பிடரியில் இரண்டு கைகளையும் வைத்துக்காயத்தைச் சுருக்கிப்பிடித்தல்.

---

### லௌலியாசனம்.

குக்குடா சனத்திலிருந்து தலையைக்கீழே சாய்த்தல் இது திரேகத்திற்கு சீதளத்தையும் குண்டலியின் விழிப்பையுமுண்டாக்கும்



### யக்தயோனி யாசனம்.

இலிங்கமென்னும் குஹ்யமுதலியவற்றைப் பந்தித்தலாகிய யோனியாசனத்தைச் செய்து உதடுகளைச் சுட்டு விரல்களாலும், நாசித்துவாரங்களை மோதிர விரல்களாலும், நேத்திரங்களை நடுவிரல்களாலும், காதுகளைச் சுட்டுவிரல்களாலும் மூடுதல்.

## பேகனாசனம்.

இரண்டு பாதங்களையும் தோளின்பேரில் வைத்து அப்பாதங்களின்மேல் இரண்டுகைகளையும் வைத்திருத்தல்,

## மகாபேகாசனம்.

சர்வாங்கங்களையும் ஆகாயத்தில் உயர்த்துதலாகிய கேசராசனம்.

---



## பிராணாசனம்

ஒரு பாதத்தைத் தொடையிலும் மற்றொரு பாதத்தைத்தோளிலுமாகசேர்த்திருத்தல்.

---



## அபானாசனம்.

மூலத்தினின்றும் வாயுவை யெழுப்பிப் பரவச்செய்து பிரயத்தினத்தால் ஒருபாதத்தைத்தோளில்வைத்து மற்றொருபாதத்தால் அசையாமல் நிலமிசை நின்றுகொண்டிருப்பது அபானாசனமெனப்படும்.

## சமானாசனம்.

ஒரு பாதத்தை தொடையில்வைத்து மற்றப் பாதத்தைக் குஹ்யமாகிய இலிங்கத்துவாரத்தில் சேர்த்தல்.



## பைரவாசனம்.

பரடுகளிரண்டையும் ஒன்றோடொன்று சேர்த்து நேராக நிமிர்ந்து முழந்தாள்களுக்குப் பக்கத்தில் இரண்டு கைகளையும் தண்டம்போல வைத்திருத்தல்.

---

## மண்டூகாசனம்.

பரடுளிரண்டினும் பிருஷ்டத்தைச் செவ்வையாயிழுத்து முழந்தாள்களை பறிவலயவடிவமாய் வைத்துக் கைகளைப்பாதங்களில் வைத்திருத்தல்.

## மர்க்கடாசனம்.

கைகளால் பாதங்களைச் செவ்வையாயழுத்தி, ப்ரதமத்தியில் சிரசை வில்போல்வைத்து அங்குஷ்டங்களைத்திடமாகப்பிடித்துக்கொண்டிருத்தல்.

## ஏகபாதாசனம்

ஒருபாதத்தை நீட்டி மற்றப்பாதத்தைக் கழுத்தின்பேரில்வைத்து இரண்டுகைகளையும் கோர்த்து அதின்மேல் வைத்துக்கொண்டிருத்தல்.

## பணீந்திராசனம்.

இரண்டு கால்களையும் சுற்றிக்கொண்டு இரண்டுகைகளில் நிற்றல்.

## யோகநித்திராசனம்.

கால்களால் கழுத்தைச்சுற்றிக் கைகளைப்பின்புறமாய்க் கட்டிக்கொண்டுசயனித்தல். இதுசுகத்தைத்தருமாசனமாம்.

### சுகாசனம்.

எப்படி யிருந்தால் ஸ்திரமும் சுகமு முண்டாகுமோ அப்படி யிருத்தல் சுகாசனம். இதை அசக்தன் ஆச்சிரயிக்கவேணுமென்று கிரந்தங்கள் கூறுகின்றன.

### தண்டாசனம்.

உட்கார்ந்து விரல்களையும் பரடுகளையுஞ் சேர்த்து தொடைகணைக்கால் பாதமென்பவைகளைப்பூமியிற்பொருந்த நீட்டித்தண்டத்தைப்போற் சயனித்தல்.

### சக்கிராசனம்.

வலதுகாற் பரட்டில் இடது தொடையையும், இடது பரட்டில் வலது தொடையையும் உடன் வைத்து நிமிர்ந்திருத்தல்.

### அர்த்தாசனம்.

வீராசனமே அர்த்தாசன மென்பர்.

### உத்கடாசனம்.

இதுவே பதுமாசனம்

இரண்டு தொடைகளின் மேரிலும் இரண்டு பாதங்களையும் செவ்வையாக வைத்தல்.

---

### பர்வதாசனம்.

மலைபோ லசையாதிருத்தல்.



மேலும் - பாதபீடாசனம்- நிராலம்பம்-கிரௌஞ்ச நிஷதனம்-ஹஸ்தி நிஷதனம்-உஷ்ட்டா நிஷதனம்-பாதபந்தம் சமஜாநு-விதானம்- விசித்திரகரணி-கார்முகம்-பிண்டமயூரம் - அர்த்தசந்திரிகம் தார்க்ஷியம்-சூலம்-கட்கம் - முத்கரம்-மகரம்-திரிபதம்-காஷ்டம் - தாணுட - ஹஸ்திகர்ணிகம்-பீமம்-சர்வதோபத்திரம் என அநேக ஆசனங்களின் பெயர்கள் மாத்திரம் சாஸ்திரங்களிற் காணப்படுகின்றன. முற்கூறிய ஆசனங்களை அப்பியா

சிக்குங்கால் ஒரு ஆசனத்தி லிருந்து வேறு ஆசனத்தை ஆ
ப்பிக்க வேண்டும். ஒரு ஆசனத்தையே மாறுவதால் அது
இரண்டாசனமாகின்றது. ஆசனங்களுக்குள் சில தேகவியா
திகளை நீக்குவனவாயும் சில பிராணனைச் சுழுமுனை மார்க்
கத்தில் செலுத்துவனவாயு மிருக்கின்றன.

ஆசனம் எவனால்ஜெயிக்கப்படுகின்றதோ அவனால்மூன்
றுலகமும் ஜெயிக்கப்படுமென்று தரிசனோப நிஷத்தும் திரிசி
கியுப நிஷத்தும் கோஷிக்கின்றன.

---

## பிராணாயாமம்.

யோகியானவன் ஆசனஜெயத்தைபடைந்த பிறகு இந்
திரியஜயமுள்ளவனாகி, மத்தியமுள்ளதும் அதிகமில்லாததுமான போஜிப்புள்ளவனாய் ஆசானுபதேசித்த பிரகாரம்
அதிக ஆவலுடனும் சந்தோஷத்துடனும் தயிரியத்துடனும்
பிராணாயாமம் அப்பியாசஞ்செய்யக்கடவன். அதின் பிரயோ
ஜனம் யாதெனில் சுவாசரூபமானவாயு சலனத்தால் மனோ
சலனமுண்டாகும். அந்த வாயுவு சலனம் நிற்கும்போது
மனோசாஞ்சல்யமும் நின்றுவிடும். இந்த வாயுவு மனங்கள்
அசைவற நின்றுவிட்டால் யோகி தீர்க்காயுசுள்ளவனாய் தே
வனாகின்றான். இந்த மேலான பிரயோஜனத்திற்காகவே பிரா
ணனென்னும் வாயுவை பிராணாயாமத்தால் நிரோதிக்கவே
ணும். மேலும் மனுஷியாள் தேகத்தில் பிராணனிருக்கிறவ
ரையில் ஜீவிக்கிறார்கள். அந்த பிராணனென்னும் காற்று உட
லைநீங்கினால் மரணமென்னப்படுகிறது. ஆகையால் அப்படி
பிராணனென்னும்வாயுவைப்போகவொட்டாமல்பிராணாயாம
மென்னும்உபாயத்தால் தடுத்தல் அவசியம் மேலும் மலங்களி
னால் கூடிய நாடிகள் எப்பொழுது பரிசுத்த மடைகின்றன
வோ அப்பொழுது யோகி பிராண நிரோதன சமர்த்தனாகின்
றான். அதற்காகவே பிராணாயாமம் அவசியம்செய்யவேணும்.

## நாடி சோதனைவிதம்.

வெளிவாயுவை உள்ளுக்கிழுக்குதல்பூரகமென்றும், அப்படிக்கு உட்கொண்ட வாயுவை உள்ளே நிறுத்துதல் கும்பகமென்றும், இந்தக்கும்பித்த வாயுவைவெளியில் விடுதல் இரேசகமென்றும் பிராணாயாம கிரமம் சொல்லப்பட்டது. ஆகையால் யோகி பதுமாசனத்திலிருப்பவனுமாய் உச்வாச நிச்வாசங்களென்னும் பிராணவாயுவை (சந்திரனென்கிற) இடைகலையால் (இடதுமூக்கால்) பூரித்து அப்படிப்பூரித்ததை சக்தியுள்ளளவும் (உள்ளே நிறுத்தி) கும்பித்து பின்பு (சூரியனென்னும்) பிங்கலையால் (வலதுமூக்கால்) இரேசிக்கவேணும் மறுபடியும் இடைகலையால் (இரேசிக்கவேணும்) வாயுவை மெள்ள வெளியில் விடவேணும்.

இன்னும் சந்திர சூரிய நாடிகளில் எந்த நாடியால் இரேசிக்கப்படுகிறதோ அந்தநாடியாலேயே பூரித்து தேககம்பமும் வேர்வையும் உண்டாகும் வரையில் அதிககஷ்டத்துடன் கும்பித்து அப்படி பூரித்த நாடிக்கு அன்னியமான நாடியால் அவசரப்படாமல் மெதுவாய் ரேசிக்கவேணும் இந்த அப்பியாசத்தில் அவசரப்பட்டால் கெடுதியுண்டாகும் பூரகஞ்செய்த கலையிலேயே இரேசகம் செய்யக்கூடாது, இரேசகஞ்செய்த கலையிலேயே பூரகஞ்செய்யவேண்டியதை கவனிக்கக்கூடாது. இப்படி சந்திரகலையினால் பூரித்து கும்பித்து சூரியகலையினால் இரேசிக்கவேணும். பின்பு சூரியகலையினால் பூரித்து கும்பித்து சந்திரகலையினால் இரேசிக்கவேணும். இப்படி சூரியசந்திர நாடிகளின் அப்பியாசத்தை நாளுக்குநாள் அதிகப்படுத்தவேணும் இதனால் யோகாபியாசிகளின் நாடிகள் மூன்றுமாதங்களில் சுத்தமாகின்றன.

---

## பிராணயாமஞ் செய்யவேண்டிய காலபரிமாணங்கள்.

அருணோதயம், மத்தியானம், சாயங்காலம் அர்த்த ராத்திரி நான்குகாலங்களிலும், முறைக்கு எண்பது பிராண

யாமங்களாக தினந்தோறும் மூன்றூற்றிருபது பிராணாயாமங்கள் செய்யவேணும். அசக்தர்கள் மூன்றுமுறை செய்யலாம். இப்படிக்கி ஹடயோக பிரதீபிகையில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் யோக சந்திரிகையில் காலையில் 60- மத்தியானம் 40- சாயங்காலம் 20- அர்த்தராத்திரியில் 20- ஆக பிராணாயாமம் செய்யச்சொல்லி இருக்கிறது.

யோக சிந்தாமணியில் நித்திரை செய்பவன் தன் சுவாசம் எவ்வளவு நேரம்போய் திரும்புகிறதோ அது பிராணாயாம யாத்திரைகாலமாம். அப்படி 12½ சுவாசகாலம் பிராணாயாமகாலமாகும். மேலும் சகல யோகங்களிலும் பிராணாயாமம் முக்கியமாம். அது சித்திக்குமாகில் பிரத்தியாகார முதலியன சித்திக்கும். ஆகையால் வாஸ்தவமாக பிராணாயாமமே பிரத்தியாகார முதலிய வசனங்களாற் சொல்லப்படுகிறது. இப்படிக்கி கிரந்தாந்தரத்தில் பிராணாயாமமே அப்பியாசகிரமத்தால் அபிவிருத்தியாகி பிரத்தியாகாரதியானதாரணாசமாதிகளென்று சொல்லப்படுகின்றது என்று காணலாம்.

---

## பத்தியம்.

பிராணாயாம அப்பியாசஞ் செய்யுங்காலத்தில் பால் நெய் முதலிய சாத்விக ஆஹாரஞ்செய்யவேணும், அந்த அப்பியாசந் திடமான பிறகு இந்த ஆஹார நியமனம் வேண்டியதில்லை.

---

## பலன்கள்.

ஆசான் சன்னிதானத்தில் யுக்தமாய்ச் செய்யப்பட்ட பிராணாயாமத்தால் சகலரோகங்களும் நிவாரணமாகும். அ
யுக்தியாய் தானாய்ச்செய்யும் பிராணாயாமத்தால் அனேக ரோகங்களுண்டாகும். அந்த ரோகங்களின் விவரம்.

விக்கல், சுவாசம், காசம், தலைவலி, காதுவலி, கண்வலி, இப்படிக்கு அனந்த ரோகங்கள் வாயுவின் பிரகோபத்தாலுண்டாகும்.

இரேசக பூரகங்களில்லாமல் கேவலம் கும்பகம் மாத்திரஞ் சித்திக்குமாயின் அந்த யோகிக்கு மூன்றுலகத்திலும் அடையதற் கரியதொன்றுமில்லை.

ஹடயோக இராஜயோகங்கள் ஒன்றுக்கொன்று சகாயம். ஒன்றில்லாமல் மற்றொன்று சித்திக்காது. ஆகையால் இராஜயோகம் சித்திக்கும்வரையில் ஹடயோக ராஜயோகங்கள் அப்பியசிக்கவேணும்.

---

## பிரத்தியாஹாரம்.

மனது-புத்தி-சித்தம்- அகங்காரமென்னும் அந்தக்கரண சதுஷ்டயங்களும். சுரோத்திரம்-த்வக்கு-சக்ஷு-ஜிஹ்வை ஆக்கிராணம்-வாக்கு-ஹஸ்தம்-பாயு-குஹ்யம்-என்று யுதுகர் மேந்திரியங்களும். ஆகபதினான்கு இந்திரியங்கள். தங்கள் சேஷ்டைகளில்செல்லவொட்டாமல் நிறுத்துதல் பிரத்தியாஹாரமென்று சொல்லப்பட்டிருக்கிறது.

அந்த இந்திரியங்களின் தொழிகள் யாதெனில்:—

மனது-சந்தேகிக்கும்-புத்தி-நிச்சயிக்கும்-சித்தம்- சலிக்கும்-அகங்காரம்-அபிமானிக்கும், இவை அந்தக்கரண சதுஷ்டய சேஷ்டைகள்.

காது-இன்பமான சப்தங்களையும்-தேகம்-சீத-உஷ்ண கடின மெது-முதலான வைகளையும், கண்-பலவிதவர்ணங்களுடன் கூடிய ரூபங்களையும், நாக்கு-பலவித ருசிகளையும், ஆக்கிராணம், சுகந்த துர்கந்தங்களை மோருகிறதும், வாக்கு-நானாவித-சுபாஷை-துர்பாஷைகளாடுவதும், கை-நல்லதுஷ்ட செய்கைகளைச்செய்வதும், பாதம்-கண்டபடிதிரிகிறதும், பாயு மலவிசர்ஜனம் செய்கிறதும், குஹியம்-பெண்களுடன் கூடுகிறதும், இந்த செயல்களிலிருந்து மனதை திருப்புகிறது பிரத்தியாஹார மென்னப்படும் அதாவது-சாதாரணமாய் விஷயங்களில் செல்லுகிற இந்திரியங்களை பலாத்காரமாய் திருப்புதல்.

---

## தியானம்.

தியானம்-சகுணமென்றும் நிர்க்குணமென்றும் இரு வகைப்படும்.

சகுணதியானமாவது புராணாதிகளில் பலவாறாய் சொல்லியிருக்கும் ஹரிஹராதிமூர்த்திகளை மனதில் செவ்வையாக பாவித்து மனதினாலே பத்திரபுஷ்ப பலாதித்திரவியங்களை கல்பித்து தூபதீபாதி ஷோடசோபசாரங்கள்செய்து தியானித்தலாம்.

நிர்குண தியானமாவது விதிபிரகாரம் பத்மாசனத்தில் உட்கார்ந்து நேத்திரங்களைமூடி ஸ்தூல சூக்ஷ்மகாரண சரீரங்களையும், பதினான்கு இந்திரியங்களையும், தசவித பிராணங்களையும் திரிசியங்களென்றும், அந்த திரேகேந்திரிய பிராணங்கள் தானல்லவென்றும் இவைகளைபார்க்கும் சாக்ஷியும், அந்த சாக்ஷியை நானென்னும் விருத்தியும் திருசியமானபடியால் அந்த விருத்தியை பார்க்கும் சாக்ஷி தானென்றும், மாயாகல்பிதங்களான விஜாதியங்களென்றும் பகிர்திருசியங்களையும் சஜாதீயங்களான அந்தர்திருசியங்களையும், அந்த இருவகை திருச்சியங்களுக்கும் சாக்ஷிதானென்றும் மனோவிருத்தியைபோக்கி வியந்திய கியாணுந்தாகண்ட சுவரூபமாகி யெல்லாதிருச்சியங்களாகிய ஒன்றான பிரமம்தானென்றும் மனோ திருடமுண்டாகும் வரையில் நிர்விகல்ப பிரம்ம நிஷ்டையுடைத்தாயிருத்தல் நிர்குணதியானமென்னப்படும்.

---

## தாரணை.

மூலாதார, ஸ்வாதிஷ்டான, மணிபூரக, அனாஹத, விசுத்த, ஆக்ஞேய, மென்னும் ஷடாதார கமலங்களில் அவைகளுக்கு அதிதேவதைகளாகிய கணபதி பிர்மா, விஷ்ணு, ருத்திரன் ஈச்வரன், சதாசிவன், இவர்களை அந்தந்த கமலங்களில் தியானித்துமனதைசெவ்வையாய் நிறுத்துதல்தாரணையாகும்.

மேலும் ஹடயோக ப்ரதீபிகையில்.

"பிராணாயாமத்தால் வாயுவையும் - பிரத்தியாஹாரத்தால் இந்திரியத்தையும், வசப்படுத்தி அதன்பின் சுயாசிரியமான சகுண மல்லது நிர்க்குண) பிரமத்தில் சித்தத்தின் எதிர்த்தன்மையைச்செய்யவேணும்" இது தாரணை விஷ்ணு புராணத்தில் சொல்லப்பட்டது.

"யோக சாம்பிராஜியத்தை (இராஜயோகமுடைமையை) விரும்பியவனால் சகல (பாகியாந்தர விஷயங்களின்) சிந்தைகளைவிட்டு சாவதான (ஏகாக்கிர) மாகிய சித்தத்தால் நாதமே அனுஷ்டிக்கத்தக்கது" தாரணை.

"ஆத்மாவினிடத்தில் இந்திரியங்களோடு மனதைச்சேர்த்தல்" தாரணையாகும்.

---

## ஸமாதி.

இந்த சமாதியில் அனந்த விதங்களுண்டு அவைகளில் சிலவற்றை இவ்விடத்தில் விவரிக்கப்படும்.

1. காண்பான் காக்ஷி காணப்படும் பொருளென்றும் திருபுடியில்லாத பரமானந்த சொரூபசுத்த சைதன்னியவடிவமாய் ஜீவபாவனையற்றதாய் தானாய்விளங்கு மவஸ்தை சமாதியென்னப்படும்.

2. நித்தியமும், எல்லாவற்றினுமுள்ளதும் தோஷரகிதமானதும், கூடஸ்தமுமாகிய ஆத்மா ஒன்றாயிருந்துகொண்டு மாயாமயக்கத்தால் பேதப்படுகின்றது. சொரூப (வாஸ்தவ) மாக பேதப்படுகிறதில்லை. ஆகையால் அத்வைதமொன்றேயுள்ளது. பிரபஞ்சமுமில்லை. சமுசாரமுமில்லை. எப்படி ஆகாயமொன்றே கடாகாயம் மடாகாயமென்னப்படுகிறதோ அதுபோல, ஆத்மாவொன்றே பிராந்தர்களால் ஜீவாத்மா பரமாத்மாவென, இரண்டுவகையாக சொல்லப்படுகின்றது. நான் தேகமல்லன் பிராணனல்லன் இந்திரியங்களல்லன் சாக்ஷிசுருபமாயிருத்தலால் கேவல சிவமேயான் என்னும் புத்தியெதுவோ, அதுவே அங்கேசமாதியென்னப்படுகிறது.

3. தியானிக்கிறவன், தியானமென்னும் இரண்டையும் விட்டு காற்றில்லாத விடத்திலுள்ள தீபம்போல தியானிக்கப் படும் பொருள் ஒன்றைமாத்திரம் விஷயம்செய்யும் சித்தம் சமாதி யென்னப்படும்.

நாமே பரபிரமம், பரபிர்மமே நானென்னும் நிலை சர்வ விருத்தி நிரோதமாகிய சமாதியென்னப்படும். செவ்வையாக தியானத்தை மறத்தலும் சமாதியாமே, பிரபாசூனியம், மன சத்தியம், புத்திசூனியம், நிராமயமும்சர்வசூனியமுமாகியநிரா யாசம். சமாதியென்னப்படும், இன்னுஞ் சில விதங்களுண்டு.

ஸமாதியுக்தனானயோகி காலனால் விழுங்கப்படமாட்டா ன். சுபாசுப கர்மங்களால் பாதிக்கப்படமாட்டான் ஜனனமர ணாதிகளால் துக்கப்படமாடான், அன்னியர் தன்னிலையும் ம ந்திராதிகளாலேயும் சாதிக்கப்படமாடான், சமாதியுக்தனா னயோகி, சீதோஷ்ணங்களையும், சுகதுக்கங்களையும், மானாபி மானங்களையும் அறியமாட்டான்.

ஸமாதியோடு கூடியயோகி ஆயுதங்களால் கொல்லப் படமாட்டான், ஜெயிக்கப்படமாட்டான், மந்திர தந்திரங்க ளாலும் வசீகரப் படமாட்டான்.

முன்குறித்திருந்த நிர்குண பஞ்சதசயோகங்களின் விவரம், இதையே கிரந்தாந்திரத்தில், உபாதிக்கு அங்கங்க ளென்று சொல்லப்படிருக்கிறது ஆனால் இதில் யமத்தைவி ட்டு லக்ஷியத்தை சேர்த்திருக்கிறது.

யமம்:—பஞ்சபூதங்கள், சரீரதிரயங்கள், என்னும் பாகிய திருசியங்களும், பதினான்கு இந்திரியங்கள். பத்து பிராணங்கள், என்று அந்தர் திருசியங்களும், பரபிரம்மே யென்றும் அதுதானென்றும், விகல்பமற்றிருப்பது.

நியமம்:—காணப்படுகிற திருசியங்கள் ஸமஸ்தமும் நா னல்லவென்றும், ஸர்வசாக்ஷியாகிய பரமாத்மா நானே யெ ன்பது.

த்யாகம்:—தனக்கன்னியமாய் தோன்றுகிற திருசியங் களை விடுதல்.

மௌனம்:—செவியால் கேட்கப்படும் வார்த்தைகளில் மனதை செலுத்தாமலிருப்பதும் சங்கல்பங்களில்லாமலி ருப்பதுமேவ.

தேசம்:—ஸத் குருவினுடைய உபதேசமே தேசம், திரி கூடஸ்தானத்தில் லக்ஷியந்தப்படமாயிருப்பது நிர்ஜன ஸ்தல மென்றும், ஏகாந்த ஸ்தலமென்றும், தேசமென்றுஞ் சொல் லப்படும்.

காலம்:—என்பது பிரமகாலம், ஆதிகாலம், ஆனந்தகா லம் என்று மூன்றுவகைப்படும்.

ஆஸனம்.—தேகவிசனத்தைவிட்டு பிரமானந்தமானதே ஸாகாசனமாம்.

மூலபந்தம்:—தத்துவபிரதானமாகிய பரமாத்மாவேயா கும்.

தேஹஸாமியம்:—ஸகலநதிகளும் சமுத்திரத்தில் கலந் திருப்பதுபோல் தேகத்திலிந்திரியங்கள் கலந்து லயப்பட்டு தானே பிரம்மென்றிருப்பது.

த்ருக்ஸ்திதி:—ஜிதேந்திரியனாய், சிதாகாசத்தில் கண் ணைத்திறந்து சாம்பவிமுத்திரையாற் பரத்தைக்காண்பதாம். இதைச்சதா கண்ணுற்றிருப்பதே லக்ஷியம் மென்னப்படும்.

பிராணாயாமம்:—அந்தர் பஹிர் திருசியாதிகளை யெப் பொழுதுந்தானல்லவென்று தன்னைத்தான் பார்ப்பது.

ப்ரத்தியாஹாரம்:—சத்தியம் அஸத்தியம் பிரக்ருதி, வி ஷயம், மூன்றுலகங்கள், நிஜமாய் பரமாத்மா ரூபமென்று நிச்சயித்திருப்பது.

த்யானம்:—தேஹேந்திரியங்களும், கிரியங்களும், நா னல்லவென்றும், நானே கிரிகனென்றும் எப்பொழுதும் தன் னைத்தான்பார்த்துக்கொண்டிருப்பதேயாம்,

தாரணை:—மேலே சொன்ன த்யானத்திலுறுதியாய் நிற்றல்.

ஸமாதி:—ஜாக்கிரம், சொப்பனம், ஸுஷுப்திகளின் தோற்றப்படுகிற போக பாக்கிய, நடக்கை, உபயோகவஸ்து வெமுதலானவைகளெல்லாம் பரமாத்மாவென்றே. (அது தானேயென்று தன்னைத்தான்) ஸதாகாலந்தரிசித்துக்கொண் டிருப்பது.

மேலே யுதகரித்த பஞ்சதச யோகங்கள், ஸ்ரீராமாஞ்சநேய சம்வாதசருக்கத்தில் சொல்லியபடி, இதுவே இன்னும் விரிவாய் இதரயோக கிரந்தங்களிற் பார்க்கலாம், இராஜயோகத்திற்கு மேலே சொன்னபதினைந்தும் அங்கங்களாகும், இவைகளை அப்பியசிப்பவன் இராஜயோகியாவதற்கு யாதொரு சந்தேகமிராது, மனம் விரிவது சம்சாரதுக்கமும் மனம் ஒடுக்குவது மோக்ஷமுமென்றுவேதசாஸ்திரமும், பெரியோர்சம் மதமுமாகையால் அப்படி அந்தமனம் குவிந்து பரமானந்தசுகமடைவதற்கேபிராணயாமாதிஞானமே இராஜயோகங்கள் சொல்லப்பட்டன, அது மிகவும் பிரயாசையான போதிலும் கஷ்டப்பட்டே சாதிக்கவேணும் சுயமாகிடைக்கு மோ சோணுசலன் பாதம் என்று சைசைபயிகள் சொல்லுகிற பிரசாரம் ஈஷணத்திரயங்களென்னும் மண், பெண், பொருளாசைகளை அடியோடே சுட்டுதள்ளிவிட்டு, பரிசுத்த மனதுடன் ஆசானையடுத்து அவருடைய அருள்பெற்று ஞானபோதானந்தனுகவேணும், அப்படிக் கிசெய்யாமைதவிட்டு ஆசைவலைக்குள்ளாகப்பட்ட மதிஹீனனுக்கு மிகவும் புகழத் தக்கது. ஷை அத்துவிதானந்தம் லபிக்கமாட்டாது ருத்ருக்ஷபூனைப்போலொத்த வேஷதாரிகளுக் கெப்படி கிடைக்கும். மூடவன் கொட்புத்தேனை யெப்படி ஆசையடையலாம்?

அஞ்ஞான துக்கங்களென்னும் கிளைகள் இலைகளுடைய பெரிதான விருக்ஷத்தை சாதன சதுஷ்டய உபாயத்தினுல் அதினுச்சியிலிருக்கும்பிரஹ்மானந்தமென்னுக்தேனை அனுபவிப்பான். அவனுக்குத் திரமை என்னும் பக்தி வைராக்கிய ஞானமில்லாதவன் ஏங்கி அழுதுக்கொண்டு சம்சாரமென்னும் படுகுழியில் விழுந்து அதோ கதியடைய வேணும், இப்பொழுது உற்றுப்பார்க்க பண்டிதாளும் பாமராளும்ஒரேவிதமாக விருக்கின்றார்கள். பண்டிதர்களென்பவர்கள் உபதேசங்

களுக்குமாத்திரம் உயர்ந்தவர்களாயிருக்கின்றார்களே யொழிய ஞானத்தை அனுஷ்டித்து காண்பிக்குமவர்களா யில்லை. படித்தவர்களே பாச வலையிலகப்பட்டுக்கொண்டு முழிக்கிறதாயிருந்தால், படியாத பாமரர்கள் சங்கதி சொல்வானேன் அது தண்ட பூபதியாயத்தோடொக்கும் ஆகையால் புத்திமான்களானவர்கள், வாஸ்தவத்தில் பாதொரு சம்மந்தமற்ற, பெண்டுபிள்ளைகள் விஷயத்தில் மிகுதி ஆவல்கொண்டு அதிக கஷ்டப்பட்டு, அல்பர்களிடத்திலடிமைசெய்து அசத்தியங்கள் பேசி அர்த்தசம்பாதியம் செய்யும் விஷயத்தில் படும்மனோகாய பிரயாசங்களில் பத்திலொருபங்கு, நாம்யார் எப்படியிருந்தோம், என்னமாவோமென்று, விசாரணைசெய்ய ஏன் பிரயாசைப்படக்கூடாது. பெரியோர்கள் ஏன் வேதாந்த கிரந்தங்களெழுதியிருந்தார்கள், அதையாவது பார்ப்போமென்றாவது ஏன் கொஞ்சம் நினைக்கக்கூடாது, அகஸ்மாத்தாய் சாகிறவனுக்கு ஆசைகளேன், ஆகையால் இருப்பது பொய்யென்று இல்லரத்தை விட்டு ஆசானருள் பெற்று ஆனந்தமடைதல் கர்த்தவ்யம்,

யோகமென்பது ஜன்மத்தைப் போக்கப்பட்டதும், அஞ்ஞானமென்கிற இருட்டுக்குச் சந்திரனைப்போலப் பிரகாசிப்பதும்; தேவதைகளாலே ஸ்தோத்திரஞ் செய்யப்பட்டதும், விஸ்தாரமாகிய ஜனனாதிகளை ஹதஞ்செய்யும் விவேகத்தைக்கொடுக்கப்பட்டதுமாகிய யோகசாஸ்திரம்.

வேதாந்தமென்னும் வழியில் நடப்பதை முன்னம் அறிந்துகொள்ளாமல், விவேகிகள் சிலர் சில வேதாந்த போதமாகிய வார்த்தைகளை யுக்திசெய்து தாம் மஹா சாந்தமுடையவர்களைப்போல் வாதஞ் செய்வார்கள்; அதனாலென்ன பிரயோஜனம். வேடிக்கையான வார்த்தைகளில் சில கற்றுக்கொண்டும் பாடிக்கொண்டு மிருந்தால் அதனால் பிரம்மாநுபவஞ் சித்திக்குமா ? அவுஷதங்களினுடைய பெருமையும் சரக்குகளின் பேர்களையும் விசேஷமாகப் பிரஸ்தாபஞ் செய்தால் அதனால் வியாதி நிவர்த்தியாகுமா? பலவிதமான அன்னங்களை விவரித்துச் சொல்லிக்கொண்டால் பசி தீருமா? அதுபோல் விருதாவாதந்தால் பயனுண்டோ ? இல்லை.

யோகாப்பியாசத்தால் ராகாதி துர்க்குணங்கள் நசிக்கும் ஆகையால், மனோலயத்தினால் காணப்பட்ட பிரம்மபதத்தை க்கண்டு கொள்வதற் கவசியமான யோகாப்பியாசம் வேண்டியது.

தாரகமென்பது, சித்த சுத்தியேயாம்.

சாங்கியமென்பது, ஞானமாகிய ஆத்மாவையும் அனாத்மாவையும் தெரிந்துகொள்ளல்.

அமநஸ்கமென்பது, பிரம்மஞானத்துக்காதாரமானது ஆதலால் அதனை முதலிற் றெரிந்துகொள்ளவேண்டியது.

முதலில் யோகமாவது, சுருதி—"அதிஸர்வத்திர வர்ஜயேத்" என்னும் ஞாயத்தால் மிதமாகிய போஜனமும் நித்திரை சஞ்சாரமுங் குருவாக்கிய பிரகாரம் யுக்தபதார்த்த பத்தியஞ் செய்துகொண்டு விஜனபூமியில் சமமான இடத்தில் பத்மாசனமொன்று செய்து இந்திரிய நிக்கிரகஞ்செய்து தன் குருவினால் தர்ப்பையைப்பரப்பித் தரப்பட்ட முத்திரையை வைத்துக்கொண்டு உபதேசமந்திரத் தியானத்துடன் இரண்டுசாமம்அப்பியாசஞ் செய்யவேண்டியது.

பஞ்ச முத்திரைகளாவன-(1) கேசரி, (2) பூசரி (3) மத்யம், (4) ஷண்முகி, (5) சாம்பவி என ஐமுத்திரைகள். [5]

1-வது. கேசரி முத்திரையாவது, நேத்திரத்தைத் திறந்தாகிலும் மூடியாகிலும் திருஷ்டி தப்பாம லிரண்டு புருவமத்தியில் லக்ஷியம்வைத்துப் பார்ப்பது அந்தர்லக்ஷியமாகும்.

2-வது. பூசரி முத்திரையாவது. நேத்திரங்களசையாமல் மூக்கின் நுனியைப்பார்ப்பது. இதுவும் அந்தர்லக்ஷியமாகும்.

3-வது. மத்யமாவது, நேத்திரங்களைமூடி நாசிகா மத்தியில் திருஷ்டிவைத்து நடுநெற்றியைப் பார்ப்பதுமத்திய லக்ஷியம்.

4-வது ஷண்முகி முத்திரையாவது, இரண்டு கையாலும் கண்களிரண்டும் நாசித்துவாரங்களிரண்டும் வாயும் செவிகளிரண்டும் மூடி பகிர்லக்ஷியம் வைத்துப்பார்ப்பது; இந்த

அப்பியாசத்தில் மனதும் நேத்திரமும் அந்தர்முகமாக்கி நா தபிந்து கலைகளை ஸ்வாநுபவஞ் செய்வது.

5-வது. சாம்பவிமுத்திரையாவது, நேத்திரங்களைத்திறந்து தசப்பிராணன்களையும் பதினொன்கு இந்திரியங்களையும் ஜயித்து சிதாகாசத்தில் லக்ஷியம்வைத்துப்பார்ப்பது சாம்ப விமுத்திரையாகும்.

இவ்விதமாகப் பார்க்கும்போது சிதாகாச ஸ்தானத்தி லிருந்து ஹிருதயாகாசத்தில் சுரோத்திரத் துவாரங்களில் முன்னங்காணப்பட்டுப் பின்பு ஹிருதய வீதியில்.

நாதம் பிந்து கலை என்று சொல்லப்பட்ட ஓங்கார சப் தம் பேதமாய் ஒலிக்கும்; நாதமானது பத்துவிதமாகச் சப் திக்கும்; அதற்குமேல் துரீயமென்பதைச் சொல்வோம்.

(1) சிணியென்றும், (2) சிணிசிணியென்றும், (3) கண்டா சப்தமும், (4) சங்கநாதமும், (5) வீணைசப்தமும், (6) தாளசப்தமும், (7) வேணுநாதமும், (8) பேரிசப் தமும், (9) மத்தளசப்தமும், (10) மேகசப்தமுமாகும்.

இவ்வாறு சப்திக்கின்ற நாதமானது அகாரமும், மகா ரம்-கலையென்றும் சொல்லப்படும். இதனை பிரம்மமென்று வேதாகமங்களில் சொல்லப்படும்.

அதில் பிந்து வென்பது புத்தி; ஸ்தூலதேஹபிராண வாயுக்களின்சப்தமேபிரணவம்; ஆத்துமாபிரதிபிம்பமே கலை என்று சொல்லப்படும்.

ஸ்ருதிகள் அ-இதி பகவதோ நாராயண: என்றும், மே லும் அகாரத்துக்குப் பகவனாகிய ப்ரமத்தையே விசேஷமா யும், ஸ்ருதிகளில் சொல்லுகின்றன.

அகாரம்-உகாரம்-மகாரம் இந்த மூன்றும் சேர்ந்து பிர ணவமாயிற்று. இதுவே சகலபிரபஞ்ச ஸ்ருஷ்டி ஸ்திதி லய ஹேதுவாய் ப்ரம்மஸ்வரூப ஓங்காரமாகி அநாஹத சக்கரத் தில் சப்தித்துக்கொண்டிருக்கும்; இந்த பிரணவம் ருக்கு, யஜுர், ஸாம மென்னும் மூன்று வேதங்களால் மூன்றுவியா

ஹ்றுதி பிறந்து அந்த மூன்று வியாஹ்றுதியில் அகார உகார மகாரமென்னும் மூன்றக்ஷரங்கள் பிறந்து ஓங்காரமாயிற்று.

அதனால் அகாரத்துக்கு உகாரம் வவார்த்தகத்தால் பர ப்பிரம்மமே ஜீவனாகுமென்றும்.

உகாரம் சதுர்த்தியினால் பிரம்மத்துக்கே ஜீவனென்றும் புருஷகாரத்தால் ஜீவனைப் பரமாத்மாவில் சேர்க்கப்படுகிறது. இன்னும் அந்த உகாரமே பிரக்ஞாதி பிரத்தியகாத்துமாவை ஐக்கியஞ் செய்துகொள்ளுவதால் பிரணவமாயிற்று.

இப்படிப்பட்ட நாதமுத்திரையினாற் பார்க்கையில் முன்னம் ஐந்து ஆகாசங்கள் காணப்படும்.

ஐந்து ஆகாசங்களின் லக்ஷணம்-அவை கண்கொண்ட தூரம் காணப்படும். அதாவது,

1-வது. குணரஹிதாகாசம்-குணமில்லாமல் யாதொன்றும் தோற்றாமல் ஒன்றும் ஒப்பிடக்கூடாததாய் ஒன்றுமில்லாததாய்க் காணப்படும்.

2-வது அந்தகாராகாசம்-அதிக இருட்டாகக் காணப்படும்.

3-வது. மஹாகாசம்-பிரளயகால அக்கினியைப்போலப் பிரகாசிக்கும்.

4-வது. தத்வாகாசம்-அநேகமான விசித்திரமாகிய வெளிச்சமாகத்தோற்றும்; பஞ்சவர்ணங்களாகவுங் காணப்படும்.

5-வது. சூரியாகாசம்-ஆயிரங்கோடி சூரியப்பிரகாசமாகக்காணப்படும்.

மேற்சொல்லிய ஐந்துவித ஆகாசங்களின் தோற்றங்களான பின் பஞ்சாகாசங்களிலும் நக்ஷத்திரங்களைப்போலவும் வச்சிரங்களைப்போலவும் சித்கலைகள் காணப்படும்.

முன்சொல்லிய தசநாதங்களுடன் வீணைதண்ட தந்திகளைப்போல் ஹிருதயாகாசத்தி லிருந்து திரிகூடஸ்தானத்திற் பிரவேசமாய் ஸுஷும்னாஸ்தானத்தில் முன்சொன்ன மண்டலங்கள் கோடிசூர்யப்பிரகாசமாய்ப் பின் ஹிரண்மய

மண்டலங்காணும்; அந்த ஹிரண்யமண்டலம் மின்னலைப் போல வாக்கினால் சொல்வதற்கும் பார்ப்பதற்குங் கூடாததாய் ஆபோஜ்யோதியென்னும் பிரகாசங்காணப்படும்.

இப்படிப்பட்ட சித்கலைகளைத் தரிசித்தால் சமஸ்தபாபங்களும், வாசனுகிகளும் மிஸ்ரகர்மங்களு மடங்கும், ஆகையால் முமுக்ஷுக்களானவர்கள் வேதாந்த சாஸ்திரங்கள் தவிரவேறு விசாரணையிலகப்படாமலிருப்பது உத்தமம்.

பிராணனுக்குத் தேவதை விசிவஷ்டகன். அபானனுக்குத் தேவதை விசுவகர்த்தா. உதானனுக்குத் தேவதை பிரமன். வியானனுக்குத் தேவதை விஸ்வயோனி. சமானனுக்குத் தேவதை யமன். இந்த அதிதேவதைகளாசாக்ஷி செய்வார்கள்.

பிராணவாயு உஸ்வாஸம். அபானவாயு நிஸ்வாஸம். உதானவாயு வாக்கு. வியானவாயு அன்னங்கொள்ளும். சமானவாயு அன்னரஸாதிகளைப் பாகஞ்செய்யும்.

நாகவாயு வாந்திபண்ணும். கர்மவாயு நேத்திரங்களை விழிக்கச்செய்யும்.

கிருகரவாயு தும்மச்செய்யும். தேவதத்தவாயு கொட்டாவி விடச்செய்யும்.

தனஞ்ஜயவாயு ஸர்வதேகத்திலும் வியாபித்து விஜ்ரும்பிக்கச் செய்யும். அல்லது வீங்கச்செய்யும்.

உதானவாயு ஸ்தானுதிபத்தியம் யாதையெனில், தாள்வாய் - உண்ணாக்கு - நா - உதடு - மூக்கு - கண்டம் - பற்கள் - சிரசு இவை யெட்டும் ஸ்தானமாகும்.

ஹம், ஸம், என்னும் இரண்டக்ஷரங்களில் முதலாவது ஹகாரம் பரமாத்துமா வெனப்படும். 2-வது ஸகாரமென்பது மூலப்பிரகிருதி, அந்த ஸகாரத்துடன் மாயை யென்னும் பிந்து சேர்க்க ஹகாரத்துடன் சேர்ந்து ஆத்மா வாயிற்று.

ஸமஸ்த பூதங்களிலும் ஹம், ஸம் கலந்துகொண்டு பிராணவாயு ஹிருதய ஸ்தானத்தி லிருந்து புறப்பட்டு வெளியில் பன்னிரண்டங்குலப் பிரமாணம் உஸ்வாச ரூபமாய் ரேசகமாகும்.

அப்படி ரேசகமான வாயு அரை நிமிஷம் வெளியில் லயிக்கும்; அதற்கு பஹிர்கும்பகமென்றும் பெயர்பெறும்

அந்த பிராணவாயு உள்ளேபோனால் பூரகமென்றும், உள்ளே நின்றால் அந்தரகும்பகமென்றும் பெயர் பெறும்.

பூரகமென்னும் நிஸ்வாஸத்தால் ஹகாரமென்னும் அக்ஷரத்தைச்கூட்டக் கும்பகமாகும்; பின்னும் அந்த ஹகாரத்துடன் பிந்துவைக் கூட்டி ஸகாரமென்னும் அக்ஷரத்தை உஸ்வாஸத்தால் ரேசகஞ் செய்யவேண்டும்.

பூரகமென்னும் நிஸ்வாசத்தால் ஹகாரமென்னும் அக்ஷரத்தைக் கூட்டக்கும்பகமாகும்; பின்னும் அந்த ஹகாரத்துடன் பிந்துவைக் கூட்டி ஸகாரமென்னும் அக்ஷரத்தை உஸ்வாஸத்தால் ரேசகஞ் செய்யவேண்டும்.

இவ்விதமாக மனமும் வாயுவும் கூடி ஷடாதார கமலங்களிலெப்போது மெங்கும் நிற்காமல்-ஹம்-ஸம்(21,600) தரம்நாள் 1-க்கு சஞ்சாரஞ் செய்துகொண்டிருக்கும்.

ஆகையால் இந்த ஹம்-ஸம் ஸகல இந்திரியத்துடனே கூடிய சரீரத்தில் அகப்பட்டுக்கொண்டு இரண்டுசெவியும் இரண்டுகண்ணும் இரண்டுநாசியும ஒருவாயும் குதம் ஒன்றும் உபஸ்தம் ஒன்றும் ஆக ஒன்பது த்வாரங்களுள்ள (ஒன்பது வாசல்) தேஹமென்னும் பட்டணத்தில்-ஹம்-ஸம் வாஸமாயிருக்கும்.

இவ்விதமாய் ஒன்பது வாயில்களுள்ள வீட்டில் அகப்பட்டு வெளிப்படுமுபாயந்தெரியாமல் ஆத்மாவென்னும்-ஹம்ஸமானது இன்னமும். கிழக்குத் திக்கிலிருக்கும் இதழில் இருந்தால் அப்பொழுது புண்ணியமும் ஆசாராதி விஷயங்களில் புத்திவியாபகமும், அக்கினிமூலையிதழில் வியாபித்தால் நித்திரையும் தாமச குணமும், தெற்குத்திக்கிதழில் கபடபுத்தியும், நிருதிமூலையிதழில் பாபபுத்தியும், மேற்குத்திக்கிதழில் விளையாட்டுபுத்தியும், வாயுமூலையிதழில் பிரயாணபுத்தியும்' வடக்குத்திக்கிதழில் ஸ்திரீஸங்கமப் பிரியமும், ஈசான்ய மூலையிதழில்தானஞ்செய்யுந் தர்மசிந்தையும், பத்மமத்தியில் வை

ராக்கியப்படுத்தியும், சேஸரங்களில்ஜாக்கிரதையும், பத்மத்தின டியில்சொப்பனமும், நாளத்தில்ஸுஷுப்தியுமாக நடக்கும்.

இப்படி ஆத்மாவும் ஜீவனும் ஒன்றாய் ஸோஹமென்னும் ஹம்ஸமாகிய ஒன்பது வாசல்களுள்ள வீட்டிற்கு ச்சயானமான கூண்டிற் புகுந்து அவித்தையுடன் கலந்திருப்பதனால் வெளியிற் புறப்படக்கூடாமல் மனமென்னும் ஆதாரத்த கமலத்தின் ஆயிர மிதழில் எப்பொழுதும் சுற்றிக்கொண்டே யிருக்குப.

இப்படியாக ஹம்ஸம் சுற்றிக்கொண்டேயிருக்க ஸமாதியிலிருந்தால் ப்ருமந்தியஸ்தானமென்னும் ஆகாசத்தில் இரத்தினம்போல் திக்களை பிரகாசிக்கும்; அஃது எப்படியெனில், திக்களையென்னும் பெயருடையசூரியன் உதயமானான். அப்பொழுது ஆதாராதி ஆறுகமலங்களும் மலர்ந்தன. காமக்குரோதமுதலான அரிஷ்டவர்க்க மென்னும் அல்லிமலர்கள் குவிந்தன. ஜீவஸமூஹ மென்னுங் குயில்கள் மனோரம்யமாக பாடத்தொடங்கின.

அப்பொழுது தான் இவ்விதமான ஆச்சரியத்தால்விழித்துக்கொண்டு குரு ஸ்தோத்திரஞ்செய்து மானசபூஜாவிதாயகமாய் ஸ்நானாதி அனுஷ்டானங்கள்செய்து ஆனந்தபாஷ்ப மென்னும் அர்க்கியம் கொடுத்து முன்னதாய்சந்தேஹ மந்தேஹமென்று சொல்லப்பட்ட இராக்ஷதர்களை யோட்டி அபரோக்ஷ விக்ஞானமென்கிற கண்களாற்பார்த்து, ஆறுதாரகமலங்களைப்பூஜைசெய்து, தேகம்புளாங்கித ஆனந்தமென்னும் விருக்ஷத்தின் பழங்களைப்பறித்து நிவேதனஞ்செய்து சுகியாயிருப்பானாகில் பிரமஞ்ஞானியாவான்.

இன்னமும் பிராம்மண னென்றால் பிரம்மஞானியல்லாது மூடத்தன்மை யுடையவர்களைப் பிராமணனென்று சொல்லக்கூடுமோ? பிரம்மஸூத்ர மென்னும் பூணூல் கழுத்திற் றரித்துக்கொண்டதனாலேயே பிராமணனாவானா பிரம்மஞானவிஷயமாய்க் கைங்கரியங்களை செய்யப்பட்டவர்களல்லாமல் வேறொருவரைப் பிராமணர்களென்று சொல்லக்கூடுமா? கூடாது.

ஆகையா இவ்வுலகவிஷயாதிகள் யாவற்றையும் விலக்கி எவ்விடத்திலும் பரிசுத்தமாகிய மனதுடன் தானிருந்து வந்த சுகாதிகளை அநுபவித்துக்கொண்டிருப்பவனே மஹா யோகியென்றும் பிராமணனென்றுஞ் சொல்லப்படுவான்.

ஆகையால், பிரதிதினமும் விசேஷமாய் இரண்டுசாமம் தப்பாமல் யோகத்தை அப்பியாசஞ்செய்யப்பட்ட ஸுகுணங்களே பூஷணங்களாகவுடைய மாணாக்கனுக்கு ஆறு மாதத்திற் களைகளென்னும் ஞானமுண்டாகும். மூடனாயிருப்பவனுக் கொருவருட மப்பியாசஞ்செய்தா லுண்டாகும். எப்பொழுதும் மந்தபுத்தியாயிருக்கிற மாணாக்கனுக்குப் பன்னிரண்டுவருடம் அப்பியாசஞ் செய்தாற்றான் ஞானோதய மாகும்.

ஆகையால், வித்துவாம்சனாகவும் கவீஸ்வரனாகவும் ஞானியாகவும் வேதாந்த ஞானியாகவு மிருக்கும் உத்தமமான குருவை(அல்லது ஆசானை)த்தேடி அவருக்குத்தேஹசிஸ்ருஷை ஆத்மசுஸ்ருஷை பாவசிஸ்ருஷை யென்னும் நான்குவிதசிஸ்ருஷைகளுஞ்செய்து அவரிடத்தில் உபதேசம் பெற்றுக்கொண்டால் யோகியாவான்.

யோக நிருபண சங்கிரகம்,

முற்றிற்று.



# முக்திசோபானம்.

## 3-வது அத்தியாயம்.

### ஞானயோகம் அல்லது இராஜயோகம்.

இதுவரையில் சொல்லிவந்த அப்பியாசம் ராஜயோகங்களில் இராஜயோகத்திற்குச் சம்மந்தப்பட்டவை. தியானத்துடன் கூடிய அஷ்டாங்க யோகங்களும், நிர்குண பதினொந்து யோகங்களுமுண்டு. இவை அப்பியாச யோகமென்றும் ஹட யோகத்திற்கு மூப்புவியாதிகளென்னும் இடஞ்சலுண்டாகி அதிகாரிகளல்லாதவர்களாயும் வேதாந்த சாஸ்திரங்களை கற்றுணர்ந்தவர்களான பிரமஜிக்ஞாசிகளுக்கு மிகவும் வேண்டியதாயுள்ளதுமான யோகசாரத்தில் கொஞ்சம் இப்பொழுது கூறப்படுகின்றது.

மேலும் உலகத்தில் ஜீவன்முக்தி தெசையடைவதற்கு ஹட ராஜயோக சம்மந்த சதுஷ்டயங்களனேகமிருந்தபோதிலும் சித்தவிருத்தி நிரோதமொன்றே முக்கியமானதென்று பெரியோர்கள் சம்மதமானதையால் அதைப்பத்தி இன்னும் சில முக்கிய கிரந்தங்களிலிருந்து போதுமானவரையிலெழுதப்படுகிறது.

ஜீவன்முக்தி பிரகாசிகை 3-வது பிரகாணம் சித்தநிரோதம்.

மதங்கொண்டயானை அங்குசமில்லாமல் பலாத்காரமாத்திரத்தால் எப்படி வசப்படாதோ அப்படி உபாயமின்றி ஹடயோகத்தினலேயே மனதானது வசப்படுகிறதில்லை. மனோநிக்கிரத்திற்கு ஹடமென்றும் யுக்தியென்றும் சாதனங்களிரண்டுண்டு. ஞானகர்மேந்திரிய நிக்கிரகங்கள் ஹடமென்றும், சாதுசங்கமம் முதலான உபாயங்களினல் இந்திரியங்களை ஜெயிப்பது யுக்தியென்னப்படும். சித்தஜயோபாயங்களனேகங்களிருந்தபோதிலும் இவைகளை லக்ஷியம்பண்ணுமல்

ஹடயோகத்தினாலேயே சித்தசுவர் தீனத்திற்கு எவாள்பிரயத்தினஞ் செய்வார்களோ அவர்கள் விளக்கைவிட்டு மைப்பொடியினால் இருளைப்போக்குவார்களாவார்கள் என்றால் மிருதுவானயோகத்தில் மனதை சுலபமாய் வசப்படுத்துவதுபோல ஹடயோகத்தினா லனுகூலப்படுவதில்லை.

எவர்கள் ஹடயோகத்தினால் மனோஜயத்திற்கு கஷ்டப்படுவார்களோ அவாள் மதயானையை தாமரைக்கொடி நாரின்கயற்றினால் கட்டத்துணிகிற புத்தியற்றவர்களாவார்கள்.

எரிகரும்பில்லாத நெருப்பு எப்படி ஸ்வகாரணமான காற்றில் லயமாகின்றதோ அப்படி விருத்திகள் நசித்துநிற்கு மனது ஸ்வகாரணமான பரமாத்மாவி லொடுங்குகின்றது.

சித்தமென்னும் விருக்ஷம் விருத்திகளென்னப்பட்ட கொடிகளால் சூழப்பட்டதாயிருக்கின்றது இது இரண்டு பீஜங்களையுடையது. ஒன்று பிராணவாயுவின் அசைவு இரண்டாவது. அசக்கக்கூடாதவாசனை. வாசனையினால் பிராணபந்தமும், பிராணபந்தத்தினால் வாசனைகளும் பிரவர்த்திக்கின்றன. இது சித்தபீஜத்திற்கு பீஜாங்குர நியாயமாகும். என்றுலொன்றினை லொன்று பிறந்துகொண்டிருப்பதாயாகும். மேல் சொல்லிய இரண்டு பீஜங்களான பிராணபந்தம், வாசனை. இவைகளிலொன்று நசித்தால் மற்றொன்று உடனே நசிக்கின்றது.

கர்மானுஷ்டானங்களில் நான் செய்தேனென்றுமபிமானமும் பலாபேக்ஷையற்றிருப்பதும். சம்சாரபலங்களை யோசிக்காமலிருப்பதும், சரீர நிலையாமை அடிக்கடி விசாரித்துக் கொண்டிருப்பதினாலும், வாசனாக்ஷயமாகின்றது.

சப்தமுதலிய விஷயங்களை நிஜமென்றும் சுகமென்றும் நினைப்பதே சித்தமென்னப்படும். விடுவதற்குரிய துக்கங்களையும் பற்றுதற்குரிய சுகங்களையும் நினைப்பதை முழுதும்விட்டிருக்கும்பொழுது மனதுபிறப்பதில்லை.

வாசனா சூனியத்தினால் மனதுவிஷயங்களை சிந்திக்காமலிருக்குமோ அப்பொழுது மேலான சாந்தியையுண்டாக்கும் அமனஸ்கமென்னும் கொள்கையுண்டானதென்று அறியவும்.

சித்தக்ஷயமில்லாதவனை பந்துமித்திர குருமுதலானவர்கள்பரமசாந்தமான மோக்ஷத்தைத்தற சக்தியுள்ளவர்களாவார்கள்.

முடிவில் சித்தநாசத்திற்கு சாதனங்கள் வேதாந்தவிசாரணை சச்சங்கம் வாசனைக்ஷயம் பிராணவாயு நிரோதம், ஆனபடியால் ஹடயோகமே மோக்ஷசாதனமென்று சொல்வதற்கில்லை

---

## பகவத்கீதை.

ஓ அர்சுன: மனது மிகவும் சலனத்தையுடையது அதை அடக்க மிகவும் அசாத்தியம். இதற்கு சந்தேகமில்லை. ஆனபோதிலும், அப்பியாசத்தினாலேயும், வைராக்கியத்தினாலேயும், மனோநிக்கிரகம் செய்யப்படும், என்றால் ஹடயோகத்தினால் நிக்கிரகஞ்செய்யக்கூடாதாகிலும். மிருதுயோகத்தால் மனதைவசப்படுத்தக்கூடும்.

மேலும், சித்தத்தை பரமாத்மாவிடத்தில் அசையாமல் நிறுத்தி விஷயாந்தரங்களை எவ்வளவாகிலும் நினைக்கக்கூடாது.

கவுட பாதாசாரியார், இப்படி நிக்கிரகிக்கப்பட சித்தமானது எப்பொழுது ஸுஷுப்தியில் லயமாகமாட்டாதோ, விஷயங்களில் விக்ஷேபமடையாதோ, கல்பித பதார்த்தங்களினால் பிரகாசிக்கப்படாதோ அப்பொழுது பிரமஸ்வரூபமாய் சித்தம் விளங்கிறதென்றறியவும்.

---

## வேதாந்த பஞ்சதசி, திருப்திதீபம்.

பாமரன் பெண்முதலிய விஷய சுகங்களை யடைய அவைகளை எப்பொழுதும் நினைப்பதுபோல முமுக்ஷுவானவன் போக்தராகிய ஆத்துமா விஷயத்தில் ரொம்பவும் சிந்திக்கிறவனாகின்றான்.

மேலும் பிரதிவாதிகளை வெல்ல இச்சைகொண்டவன் காவியாலங்கார தர்க்க வியாகரணங்களை யெப்பவு மப்பியசிப்பதுபோல் முமுக்ஷுவானவன் தானான ஆத்மாவை யெப்பொழுதும் விசாரித்துக்கொண்டிருப்பான்.

சுவர்கம் முதலியலோகங்களின் போகேச்சையுடையவன் எப்படி சிரத்தையோடு ஜபயக்ஞாதிகளைச் செய்வானோ, அப்படி விருப்புவோன் வேதத்தின் பொருளாகியும் ஆத்மாவின் தன்னிடத்தில் விசுவாசமுடையவனாவான்.

எந்த ஸத்தியஞானாநந்த லக்ஷணப்பிரம்மம் சாக்ஷிரூபமாகி ஜாக்ர‍சுவப்ன சுஷுப்திப்பிரபஞ்சங்களை பிரகாசப்படுத்துமோ அந்த பிரம்மம் தானேனென்றும், புத்தி சிதாபாச முதலானவை நானல்லவென்று சுருதி அனுபவங்களால் நிச்சயித்து பிரமாதிருத்வ-கர்த்திருத்வ-போக்திருத்வ முதலிய சம்பந்தங்களினின்று முழுதும் விடப்பட்டவனாகிறேனென்று சுருதி சொல்லுகின்றது.

மேலும் அவஸ்தாதிரியங்களில் ஆத்மாவொன்றே அறியத்தக்கதாகும். இப்படி விவேகஞானத்தால் அவஸ்தாதிரியங்களை வேறுபடுத்தி அறிந்த ஆத்மாவுக்கு மறுபிறப்பில்லை.

மேலும் அவஸ்தா திரியங்களில் கிரமமாக ஸ்தூல ரகஸ்ய ஆனந்தரூபங்களாகிய எந்த போக்கியங்களுண்டோ, இன்னும் விச்வதைஜஸ பிராஞ்ஞரூபனான எந்த போக்தாவுண்டோ இன்னு மந்தந்த அனுபவரூபமான எந்த போகமுண்டோ, இவை யெல்லாவற்றிற்கும் விலக்ஷணனான எந்த சித்ரூபசாக்ஷியுண்டோ, அந்த சாக்ஷியான பரமாத்மா நிரதிசயானந்த ஸ்வரூபத்தினால் என்றைக்கும் சோபாயமானனாகின்றானென்றும். அப்படிக்கொத்த பரமாத்மாவே நானானேனென்று மோக்ஷாதிகாரி நிச்சயத்துக் கொள்ளவேணுமெனல். மேலும் உலகத்தில் பாவங்களைச்செய்யும் புருஷனால் சம்பாதிக்கப்பட்ட பாவங்கள் நசிப்பதற்காக விகிதமான ஸ்நான ஜபமுதலிய பிராயச்சித்த கர்மங்களை பதிர மெப்படி அனுஷ்டிக்கப்படுமோ; அப்படி சிதாபாசனும் தான் வெகுகாலமாய் சாக்ஷியா

களகதேசமாய் ஓராளொரு வாக்கியத்தால் பிரமமுண்டென்னும் பரோக்ஷ கியானமுண்டாகும். சகல சுருதிகளிலும் மஹாவாக்கியார்த்த விசாரணையாலேயே அபரோக்ஷபிரமக் கியான முண்டாவதாய்ச் சொல்லப்பட்ட தென்றறியவும்.

நானென்னும் கியானத்திற்கும், நானென்னும் சப்தத்திற்குமாதாரமாய் அந்தக்கரணோபாதிகமாகிய வெந்தபோதை யுண்டோ அந்தப்போதை "தத்துவமசி" "என்னும் மஹா வாக்கியத்திலுள்ள த்துவம்" பதத்தால் சொல்லத்தகுந்ததாகும்.

மேலுமந்த பரமாத்மா, மாயோபாதிகனும் ஜகத்காரணனும் பரோக்ஷத்வ தர்ம விசிஷ்டனு மாவான். இதுவே பரமாத்மாவுக்குத் தடஸ்தலக்ஷணமாகின்றது. மேலும் அந்தப் பரமாத்மா சத்யஞானாநந்த ஸ்வரூபனுவான். அப்பேர்க்கொத்த பரமாத்மாவானது "தத்துவமசி" யென்னும் மஹா வாக்கியத்திலுள்ள "தத்" பதத்தால் சொல்லப்படுவானென்று மறியவேணும்.

பஞ்சதசி–அத்வைதானந்தம்.

எம்மாத்திரம் துவைதத்தில் மித்தியா புத்தியுண்டாகுமோ அம்மாத்திர மந்தசச்சிதானந்த பிர்மஞானம். (பிரஹ்ம சாக்ஷாத்காரம்) உண்டாகுமோ அந்தப் பிர்மம் எவ்வளவு த்ருடமாயறியப்படுமோ அம்மாத்திரம் பிரபஞ்சத்தின் நாமரூபங்களை விடப்படும். எவ்வளவு துவைத மித்தியாகியானம் எவ்வளவு திருடமாயிருக்குமோ அம்மாத்திரம் பிர்மஞானமும் த்ருடமாயிருக்குமாகையால் பிரபஞ்ச மித்தியாக்யானத்தை அவசியம் சம்பாதிக்கத்தக்க தெனல்.

அநாதியாய்க்காணப்படும் துவைதம் எப்போதோவொரு காலத்திலுண்டாகும், பிர்மதத்துவகியானுப்பியாசத்தினலெ

ப்படி நிவர்த்தியாகுமெனில் வெகு காலமாய் இடைவிடாமல் சிரத்தையோடு தத்துவஞானத்தை அப்பியசித்துக்கொண்டிருப்பதினால் அப்படிப்பட்ட அப்பியாசத்தினால் துவைதவாசனை வெகுகாலமாயிருந்தபோதிலும் லேசமுமில்லாமல் நிவர்த்தியாகின்றது.

## வித்தியானந்த பிரகரணம்.

மேலும் லோகாந்தரங்களையடைய விருப்பமுள்ள மனிதர்கள் கர்மானுஷ்டானங்களைச்செய்வார்கள். நான் சர்வலோகஸ்வரூபனாகச்சே எதையுஞ் செய்ய அவசியமில்லை.

ஓம் தத்ஸத்.

மூன்றாவது அத்தியாயம் முற்றிற்று.



ஓம்.

# முக்திசோபானம்.

## 4-வது அத்தியாயம்.

### பரமார்த்த தத்துவ விளக்கம்.

இதுவரையிலும் பலவித அதிகாரிகளின் பேதங்களை அனுசரித்து முக்கியமான யோகங்களின் லக்ஷணங்களைக் கூறப்பட்டன. உலகத்திலொருவ னெவ்வளவு யோகங்களை அப்பியசித்தபோதிலும் மனோசுத்தியும் வஸ்துதத்வஞானமு மடையாவிட்டால் வெறு யோகங்கள் மாத்திரம் பயன்தரமாட்டா. ஆகையால் சம்சாரபந்த துக்கநிவர்த்தி யடைந்து நிரதிசயாநந்த மோக்ஷபதவிபெற வைராக்கிய தியானங்கள் முக்கியமாய் வேண்டியதாகும். ஆனாலிந்தக்கிரந்தத்தின் ஆதியில் சாதன சதுஷ்டய சம்பத்தியைச்சொல்லிவந்தபொழுது நித்தியாநித்தியவஸ்து விவேகமும், இஹமுத்திரார்த்தபல போகவிராகமும் ஞான வைராக்கியங்களும் ஒருவாறாகச் சுருக்கமாகச்சொல்லிமுடிக்கப்பட்டது, ஆகையாலிப்பொழுதந்த வைராக்கிய தியானங்களைக் கொஞ்சம் விரிவாய்ச் சொல்லி இந்தக் கிரந்தத்தை முடிப்பது அத்தியாவசியமென்று தோனுகின்றன.

மேலே 3-வது அத்தியாயத்தில் ஞானயோக வைராக்ய விஷயங்களைக் கொஞ்சம் சொல்லப்பட்டது. இனி மோக்ஷ ஹேதுபூதமான மனோநிச்சய ஞானத்தைத்தரும் பரமார்த்த தத்துவங்களாகிய புராணேதிஹாச சுருதிவாக்கியங்கள் சிலதை உரைத்தலாகும்.

துறவு.

ஒழிவிலொடுக்கம்.

தேடப் படும்பொருளைச் சிக்கனவா கப்புதைத்துக்
கோடிக் கொருமிடங் கொள்ளுகினும்—கூடாத
வாணாளை வீண்கழிக்கு மானிடனைப் போன்மயக்கம்
பூணார்பொய் கண்டுதுறப் போர்.

தா:—அதிக ஆவலோடு தேடின திரவியத்தைப் பத்திரப்படுத்தித் தான்சாகும்பொழுது இன்னும் கொஞ்சநேரமிருக்கும்படி ஷை திரவியத்தில் கோடிகோடியாய்ச் செலவழித்தபோதினுமாகாத இவ்வனித்திய உடலுடன் உயிருடனிருக்கும்பொழுதே நல்ல தவத்தினால் நாள்போகாமல் வியர்த்தகாரியங்களில் கழிக்கும் அறிவற்றவர்கள்போல் துறப்பவர்கள் தேகாதி பிரபஞ்சங்களில் மயக்கங் கொள்ளமாட்டார்கள்

இதனாலறியவேண்டியது யாதெனில்:—அறிவுடையோர்கள் பாலியத்தில்தானே உலகபோகங்களைவிட்டுச் சற்குரு கிருபையால் வீடடைவது முக்கியமெனல்.

ஊர்க்குருவி யுடன்வளர்த்த குஞ்சு மொருமனையில்
பாக்கனையும் பார்த்திருநம் பற்றென்றோ—மூர்க்கர்
அரிபிரம ரிந்திரர்கள் வாழ்வநித்த நம்வாழ்
வொருபொருளோ வென்றொழி வாரோ.

தா:—ஓரிடத்திலிருக்கும் ஊர்க்குருவியும் அதின் குஞ்சுகளும் அங்கேதானே யிருக்கும் பூனையும் அதின் குஞ்சுகளும் பாலியத்தில் உறவாடிக்கொண்டிருந்து வயது முதிர்ந்தபொழுது அவைகளினியற்கைகுணங்களால் பகைகொண்டு பிரிவது மனிதர் பார்த்திருந்தும், வினைக்கீடாய் வருவனவாகிய மனைவி மக்கள் முதலான இந்த உலகத்தை விட்டொழிக்காமல் இவைமேல் பற்றுக்கொண்டிருப்பதென்னவோ அதிசயம். மூடர்கள் ஷை மனைவி மக்கள் முதலானவர்கள் வினைக்கீடாய் வந்தவர்களென்றெண்ணமாட்டார்கள். அவர் ஹரிபிரம்மாதிகளின் வாழ்நாளும் அநித்தியமென்றும் அதில் தங்களளவு எம்மாத்திரமென்றும் இவ்வுலகத்தைத் துறப்பாரென்பது.

இதனால் மனைவிமுதலிய குடும்பஸ்தர்கள் வினைக்கீடாய் வந்தவர்களே யொழிய தமக்குற வெப்பொழுதுமவாளோடில்லை யென்பதறியவும். பட்டினத்துப்பிள்ளை யினைப்பத்திரகிரியைப்பரவி, விட்டு விடமாட்டார் வெருவீடர் வெட்ட

வெறு வெலும்பை நாய்கறண்டவேந்தர்வர நாய்பார்த் துறு முவலைக் காட்டுவோமோ.''

தா:—குபேரனை யொத்த செல்வராயிருந்தும், அந்த அளவற்ற செல்வத்தை யெல்லாம் துரும்பெனத் துறந்தபட்டினத்துப் பிள்ளையையும் பத்ரகிரி ராஜாவையும் புகழாது மனைவி மக்கள் முதலான பற்றுக்களை விட்டுத் துப்பத்தர்கள் துறக்கமாட்டார்கள். கொஞ்சமேனும் பசையில்லாத ஒரு வெள்ளெலும்பைக்கடித்துக்கொண்டிருக்கும் ஒருநாயானது எஜமான் வந்த போதிலும் அந்த எலும்புக்காக வந்தவராக எண்ணி அவரைக்கண்டு உறுமுவதைப்போல் நாமுமப்படியோ பகுணத்தைக்காட்டுவோமா.

இந்தப்பாட்டினால் சகல சம்பத்துகளாலும் மேன்மையடைந்திருந்தும் அவைகளில் வோரணுவேனும் பற்றின்றி அவைகளெல்லாம் துன்பமென்றறிந்து கைவிட்ட பட்டினத்துப் பிள்ளையார் பத்திரகிரியார் போலொத்துத் துறந்தோரே உத்தம ரென்பது.

நாடுநகர் வீடுடையாட்டாய் தந்தை நட்புமக்கள்
மாடுகுலம் பொன் னுடம்பின் வாதனைகள்—கூடத்
தொடுத்தவலை கண்ணித் தொடக்கு தனையிப்போ
விடப் பெறுவாரேன் பிறப்பார் மேல்.

தா:—நாடு, நகர், வீடு, மனைவி, தாய்தந்தைகள், நட்பு, மக்கள், மாடு, சாதி, திரவ்யாதிகள் இவை முதலிய உடம்புவாதனைகளும், தாமகப்பட்டுக்கொள்ள பிணித்தவலைக் கண்ணிகளுமாகிய தொந்தனையென அறிந்து இந்தத்தொந்தவினையை இப்போதே விடப்பெறுவா ரினியேன் பிறப்பார். உடம்பின் வாதனைகளான ஆடையா பரணங்கள், யானை, குதிரை, கவிகை, சிவிகை, சாமரை, முதலானவை, இங்ஙனம்கூறிய எனதென்னும் போகப்பற்றை நீத்துத்தவஞ்செய்வோர்க்கு யானென்னும் தேகப்பற்று அறும். இத்தேகப்பற்று அறவே இவற்றை யான் எனதென்று புறத்துநின்ற போதம் அறும், இப்போதம் அறவே உள்நின்ற போதம் அசுத்தவாசனைபண்

ளது சுத்தவாசனைப் பண்ணும், இவ்வாசனையினால் ஞானங் கிடைக்கும் இஞ்ஞானத்தால் வீடுளதாம்.

இப்பாட்டினால் போகவாதிக ளெல்லாம் பற்றறுத் தோர் தேகவாதனையாதிகள் அற்று ஞானத்தால் வீட்டடை வது மெய்மையாகச்சே அவர்களுக்கினி பிறப்பேயில்லை யெ ன்பதாம்.

செல்வமிளமை யுடம்பு பேய்த்தே ரென்று
சொல்லுவ தென்கா ளோபோகட்டது போய்—ஒல்லை
விடுவோர் பிறப்பிறப்பின் மீளார்கள் மீண்டால்
தொடுமோ சிவனைத்தொடா.

தா:—உடம்பு முதலிய பிரபஞ்சந்தோன்றி அழிவது பிரத்தியக்ஷமாக இருத்தலின், கானற்சலம்போல அழிவதெ ன்று ஒருவர்கூறக் கேட்கவேண்டுவது இன்றென்பதும் இங்ஙனம் பிரத்தியக்ஷமா யிருப்பினும் அறியார் அஞ்ஞா னிகளென்பதும் சுட்டறிவு போய் பிரபஞ்சத்தை அநித்திய மென்றறிந்து விரைந்து விட்டுத் துறப்பதே ஞானமென்ப தும், இத்துறவுடையோர் மறுபடியும் பிறவாரென்பதும்தவ க்குறைவால் மீண்டாராயினும் ஒன்றினும்பற்றுதல் அற்றிரு ப்பர் என்றவாறு.

உதையந் தொழப்போ வார்க்குள்ளும் புறம்பும்
புதைய வொளிவீசுமா போலே—பதிமோகி
தீக்காட்டிலே கொடுக்கச்சென்றவா கண்டக்கால்
நூக்காததன் றேதவம்.

தா:—அருணோதயத்தில் தொழச் செல்வோர்க்கு உள் ளும் புறம்பும் புதையவொளிவீசு மாபோலே (மனைசுதர் முதலிய பற்றுக ளெல்லாவற்றையும் விட்டு அவற்றின்மேல் உள்ளத்தெழும் அவாவினையு மறுத்துக்கண்டவிடங்கள்மேல் சென்று பற்றும் இந்திரியங்களையும் அடக்கி உள்ளும் புற ம்பும் ஆசையாகிய இருளற நிராசையாகிய ஒளிவீச நிற்ற லேதுறவினது முடிவு.

தனது புருடன்மேல் அதிமோகியாயிருந்தாளாள் அவன்மரித்தகாலை அவனுக்குத் தன்னைக்கொடுக்கச் சுடுகாட்டிற் சென்றவாறு கண்டால் (அவளைப்போலும் தற்போதத்தைச் சிவனுக்கு ஊணாகக்கொடுத்து தாம் ஒன்றேடும்) தாக்கற்றிருத்தல் அன்றே தவத்தினது முடிவு என்றவாறு.

உதையந்தொழுவார்க்குக் கண்விழித்தபோதும் இமைத்தபோதும், ஒளிவீசுதல்போலும் துறந்தோர்க்குப் பொறிகளால் விடயங்களைக் கண்டபோதும், காணுதிருந்தபோதும் உள்ளும்புறம்பும், நிராசையோடு இருக்கவேண்டும்.

இந்தப்பாட்டினுல் உள்ளும்புறம்பும் நிராசையோடிருப்பது துறவினது முடிவென்பதும் போதம் ஒழிந்து ஒன்றேடும் தாக்கற்றிருப்பது தவமுடிவென்பதும் அறிவிக்கப்பட்டது.

லிங்க புராணம்.

ఏకత్వమపినాస్త్యేవ ద్వైతం తత్ర కుతో న్వహో।
ఏకనాస్త్యథమర్త్యశ్చ కుతో మృతసముద్భవః॥

தா.—ஏகத்துவம் சுத்தமாயில்லாதபொழுது த்வயித வியாபாரமேது, ஆச்சரியம். ஒன்றில்லாதபொழுது மரணத்தினுல் பிறந்த மனிதனெங்கேயிருக்கக்கூடும்.

అజ్ఞానతిమిరాత్సర్వం నాత్ర కార్యా విచారణా।
జ్ఞానంచ బంధనంచైవ మోక్షో నాస్త్యాత్మనో ద్విజాః॥

தா:—இந்த ஸமஸ்தமும் அஞ்ஞானமென்றும் இருளால் உண்டாகின்றன. இது விசாரிக்கத்தக்கதல்ல. ஓ-பிராமணர்களே! ஞானம்-பந்தம்-மோக்ஷம-ஆத்துமாவுக் கெப்பொழுதுமில்லை.

నాంతఃప్రజ్ఞో నబహిఃప్రజ్ఞో నచోభయత ఏవచ।
నప్రజ్ఞానఘనస్త్వేవం నప్రజ్ఞో ప్రజ్ఞ ఏవసః॥
విదితేనాస్తి వేద్యంచ నిర్వాణం పరమార్థతః.

தா:—ஆத்ம ஸ்வரூபம். அந்தர (உள்) பிரஞ்ஞையல்ல, வெளி பிரஞ்ஞையல்ல. வெளியுள்-பிரஞ்ஞையுமல்ல, பிரஞ்ஞைகளின் சேர்க்கையுமல்ல, பிரஞ்ஞை யல்லாததுமல்ல. அது அறியப்படவே அறியத்தக்கது வேறொன்றுமில்லை. சத்தியமாய் முக்தி சுரூபமாயிருக்கின்றது.

న హ్యేషా ప్రకృతిర్జీవో వికృతిశ్చ వికారతః।
వికారో నైవ మాయైషా సదసద్వ్యక్తివర్జితా॥

தா:—இந்த ஜீவன் பிரகிருதியாகமாட்டான். விகாரத்தினால் விகிருதியாகின்றான். சத்து அசத்து ரூபங்களில்லாத இந்த மாயை விகாரமாகமாட்டாது.

விஷ்ணு புராணம்.

యదేతద్దృశ్యతే మూర్తమేతజ్జ్ఞానాత్మనస్తవ।
భ్రాంతిజ్ఞానేన పశ్యంతి జగద్రూపమయోగినః॥

தா:—ஞான ஸ்வரூபனாகிய உன்னுடைய இந்த காணப்படும் மூர்த்த ஸ்வரூபமெதுவோ அதை அஞ்ஞானிகள் பிராந்தி ஞானத்தினால் ஜகத் ரூபமாக பார்க்கின்றார்கள்.

ఏతుజ్ఞానవిధః శుద్ధచేతసస్తేఖిలంజగత్।
జ్ఞానాత్మకం ప్రపశ్యన్తి త్వద్రూపం పరమేశ్వరం॥

தா:—பரிசுத்த மனதையுடையவர்களாகிய ஞானிகள் ஸமஸ்த ஜகத்தையும் ஞானஸ்வரூபமாயும் ஜகத்ரூபத்தைப் பரமேசுவரனாகப் பார்க்கின்றார்கள்.

అహంహరి సర్వమిదంజనార్దనో
నాన్యత్తతః కారణకార్యజాతం
ఈదృఙ్మనోయస్య నతస్యభూయో
భవోద్భవాద్వంద్వ గతా భవంతి॥

தா:—நான் விஷ்ணு காணப்படும் இந்த ஜகத்தெல்லாம் ஜனார்த்தனன், ஆகையால் காரியகாரண சமுதாயமெல்லாம் அந்த விஷ்ணுவுக் கன்னியமாக மாட்டாது. யாருக்கு இப் பேர்க்கொத்த மனோபாவமுண்டோ அவனுக்கு மறுபடியும் சமுசாரத்தினா லுண்டாகிய சீதோஷ்ண சுகதுக்கதுவந்த பிராப்திக ளுண்டாகமாட்டாது

విజ్ఞానపరమార్థో సాద్వైతినోతథ్య దర్శినః।
ఏకమేవమిదం విద్వన్న భేది సకలంజగత్।
వాసుదేవాభిధేయస్యస్వరూపం పరమాత్మనః।
నిధాఘోఽపు పదేశేన తేనా ద్వైతపరోఽభవత్।
సర్వభేదాన్యభేదేన సద దర్శతదాత్మనః।
తథాబ్రహ్మతతోముక్తి మవాప పరమాంద్విజ॥

தா:—இந்த ஆத்மா உண்மையைக் காணும்படியான அத்வைத கொள்கையை யுள்ளவனுக்குத் தன்விஞ்ஞானத் தினால் சத்தியசுவரூபமாயிருக்கின்றது. ஓய்? வித்வாம்சனே! இந்த எல்லாஉலகம் இவ்விதமாய்ப் பேதரகிதமான ஓரேவஸ்து வாகவிருக்கின்றது. நிதாகனென்னும் முனிவர் வாசுதேவனென்னும் பெயருடைய பரமாத்மாவின் ஸ்வரூபத்தை உபதேசிப்பதால் அத்வைத கொள்கையிலாவலுள்ளவனாவான். அப் போதந்த நிதாகன் எல்லாவுலகத்தின் பேதங்களையும் தனக் கபேதமாய்ப் பார்க்கின்றான். அதினாலப்போதவர் பிர்மஸ்வரூ பனாகி சிரேஷ்டமுக்தனாகினார்.

ఏకస్సమస్తం యదిహాస్తికించి
త్తదచ్యుతోనాస్తి పరంతతోన్యత్
సోఽహంస చిత్వంసచ సర్వమే
తదాత్మ స్వరూపంత్యజ భేదమోహం॥

தா:—இவ்விடத்தில் காணப்படுமவைகளெல்லாம் ஏக ரூபனான பகவானே. அவரைக் காட்டினு மன்னியமாயும்

சிரேஷ்டமானதுமில்லை. அந்தப்பகவானே நானும், அவரே நீயும். அவரே இந்தவெல்லாமாகையால் பேதத்தினால் மோகிக்கச் செய்யும் (ஆத்துமாவுக் கன்னிய மென்பதை) விட்டுவிடத்தக்கவனாவாய்.

விஷ்ணுதர்மம்.

అవిద్యాచక్రియాః సర్వావిద్యాజ్ఞానం ప్రచక్షతే।

தா:—ஸமஸ்த கருமங்கள் அவித்தையாகவும் பிரமஞானம் வித்தையாகவும் சொல்லப்படுகின்றது.

కర్మణాజాయతే జంతుర్విద్యయాచవిముచ్యతే॥

தா:— ஜீவன் கருமத்தினால் பிறக்கின்றான். ஞானத்தினால் முக்தனாகின்றான்.

అద్వైతం పరమార్థోహిద్వైతంతద్భిన్న ఉచ్యతే
పశుతిర్యఙ్మనుష్యాఖ్యా స్తథైవ నృపనారకం॥

தா:—ஓ இராஜனே! ஜீவப்பிரமயிக்கிய ரூபமான அத்வைதமே பரமார்த்தமாகவும மனுஷ்யாதி ஜந்துக்களும் நாரகமென்னப்பட்டதுமான துவைதமே பின்னமாக சொல்லப்படுகின்றது.

అజ్ఞానమేత ద్వైతాఖ్య మద్వైతం శ్రేయతాంపరం।
మమత్వాహ మితిప్రజ్ఞావియుక్త మవికల్పవత్॥

தா:—துவைத மென்று பேருடையதெல்லாம் அஞ்ஞானமாகும். எனது நானென்றும் பிரஞை யில்லாததும் சங்கல்ப சூனியமானதுமான அத்வைதமொன்றே சிரேஷ்டமான ஞானம்.

అవికార్య మనాభ్యేదమ ద్వైతమను భూయతే।
మనోవృత్తిమయం ద్వైతంమద్వైతం పరమార్థతః॥

தா:—ஆச்ரயிக்கத் தக்கதும், விகார சூனியமானதும் வசனிக்கக் கூடாததுமான இந்த அத்வைதம் அனுபவிக்கப்

படுகின்றது மஞ்ஞெசி ருசியாயுள்ள துவைதம் பாரமார்த்த மானது அத்வைதம்.

తాదృగ్భవతి విజ్ఞప్తిర్యా దృశీఖలు భావనా।
క్షయేతస్యాః పరంబ్రహ్మ స్వయమేవ ప్రకాశతే॥

தா:—பாவனு ரூபமாயிருக்கும் விஞ்ப்தி எந்த பாவனையையுடையதாயிருக்குமோ அந்தப் பாவனையே யுண்டாகும். அப்போர்க்கொந்த மாயனு ரூபமான அந்த விஞப்த்தியின் நாசத்தில் பரபிரமமானது தனக்குத்தானே விளங்கும்.

ఆత్మా క్షేత్రజ్ఞ సంజ్ఞోహి సంయుక్త ప్రాకృతైర్గుణైః।
తైరేవ విగతశ్శుద్ధః పరమాత్మా నిగద్యతే॥

தா:—இந்த ஆத்துமா பிரகிருதி சம்மந்த குணத்தோடு கூடினவனுய் ஷேத்திரக்கியனென் றழைக்கப்பட்டான். அந்தப்பிரகிருதி குணங்களுடன் வியோகத்தை அடைந்தவனுய் சுத்தமாகிய பரமாத்மாவென் றழைக்கப்படுகின்றான்.

## பிரம புராணம்.

సర్వస్యరజ్జుతానాస్తి నాస్తిరజ్జౌ భుజంగతా।
ఉత్పత్తినాశయోర్నాస్తి కారణంజగతోఽపిచ॥
లోకానాంవ్యవహారార్థ మవిద్యేయంవి నిర్మితా।

தா:—சர்பத்திற்கு கயறு சுபாவமில்லை. கயற்றில் பாம்பு தன்மையில்லை. ஜகத்தின் உத்பத்தி நாசங்களுக்குக் காரணங்கிடையாது. உலகத்தார் வ்யவஹாரங்களுக்காக இந்த அவித்தை கல்பிக்கப்பட்டது.

పురుషః పరమాత్మాతుయదతోఽన్య దసచ్చతత్।
ఏవంబుద్ధ్వా జగద్రూపం విష్ణోర్మాయా మయంమృషా॥

தா:—பரிபூரணமாகிய புருஷனே பரமாத்மா. அதற்கன்னியமான தெல்லாம் இல்லாதது. இவ்வண்ணமறிந்தத

ளுல் விஷ்ணுவென்றும் மாயாரூபமாகிய ஜகத்தெல்லாம் மித்தையாகின்றது.

### சிவதர்மோத்திரம்.

తస్మాజ్జ్ఞానాసినా తూర్ణమశేషం కర్మబంధనం।
కామాకామ కృతంఛిత్వాశుద్ధ శ్చాత్మనితిష్ఠతి॥

வா:—விஞ்ஞானியானவன் கோரிக்கையாலாகிலும் அந்தக் கோரிக்கையில்லாமலாகிலும் செய்யப்பட்ட சகல கர்மபந்தங்கள் க்யானமென்னும் கத்தியினுல்வெட்டிப் பரிசுத்தனுய் ஆத்மாவிடத்திலேயே யிருக்கின்றவனுகிறுன்.

యస్మాన్మంత్ర బలోపేతః క్రీడన్సర్పైర్నదశ్యతే।
క్రీడన్నపి నలిప్యేత తత్వేదింద్రియ పన్నగైః॥

தா:—எப்படி மாந்திர பலமுடையவன் பாம்புகளோடு விளையாடிக்கொண்டிருந்து அவைகளால் கடிக்கப்பட்டவனுகாமலிருப்பனே அம்மாதிரியாய் ஞானியும் இந்திரியங்களென்னும் பாம்புகளுடன் விளையாடுகிறவனுன போதிலும் அவைகளால் தொடப்பட்டவனுகமாட்டான்,

### சுருதிகள்.

"నతుద్వితీయమస్తి"

தா:—இரண்டாவதில்லை.

"నాస్తిద్వైతం"

தா:—துவைதமில்லை.

"శ్రుతోవిదితే వేద్యంనాస్తి"

தா:—பிரமஸ்வரூபம் அறியப்படச்சே யெதினிலிருந்து மறியத்தக்க தொன்று மில்லை.

"ఏకమేవాద్వితీయం"

தா:—இரண்டற்றவஸ்து ஒன்றே.

"వాచారంభణంవికారో నామధేయం"

தா:—விகாரத்தின் பெயரானது, வாக்கின் வியாபார மாத்திரம்.

"ఏకమేవ సన్నేహనా నాస్తికిఞ్చన"

தா:—இவ்விடத்திலொன்றேயானது லேசமென்னும் அனேகமாகிறதில்லை.

"ఏకధైవాను ద్రష్టవ్యం"

தா:—ஒருவிதமாகவே நோக்கத்தக்கது

"మాయాంసృజతే విశ్వమేతత్"

தா:—மாயை இப்பிரபஞ்சத்தைச் சிருஷ்டிக்கிறது.

"తమేవం విద్వానమృత ఇహాభవతి"

தா:—அந்தப் பரமாத்மாவை இவ்விதமாயறிந்துகொள்ளுகிறவன் இவ்விடத்தில் ஜீவித்திருக்கும்பொழுதேமுக்தனாகின்றான்.

"నచేదిహావే దీన్మహతీ వినష్టిః"

தா:—பிழைத்திருக்கும்பொழுதே இவ்விடத்தில் பரமாத்மாவை யறியாமலிருப்பானேயாகில் பெரும் நாசத்தை யடைவான்.

"యఏతద్విదురమృతాస్తే భవన్తి"

தா:—எவாளிந்த பிரமஸ்வரூபத்தை யறிகின்றார்களோ அவாள் முக்தர்களாவார்கள்.

కిమిచ్ఛన్ కస్య కామాయ శరీరమనుసంజ్వరేత్"

தா:—பிரமவேத்தன் எதைவேண்டி யெவருடைய தேகத்தைத் தபிக்கச்செய்கின்றான்.

"తంవిదిత్వానలిప్యతే కర్మణాపాపకేన"

தா:—பரமாத்மாவை யறிந்து பாபகர்மங்களால் தொடப்படமாட்டான்.

"తరతిశోక మాత్మవిత్"

தா:—ஆத்துமாவை யறிந்தவன் துக்கத்தினின்று தாண்டுகின்றான்.

"ఏతద్యోవేద నిహితంగుహాయాంసో౽
విద్యాగ్రంథిం వికిరతీహ సోమ్య"

தா:—புத்தியென்னும் குகையில் வைக்கப்பட்ட இந்தப் பிரமஸ்வரூபத்தை எவனறிகின்றானோ, ஓய் ஸௌம்யா? அவன் வித்தியாபந்தத்தைத் துடைத்துவிடுகின்றான்!

"భిద్యతే హృదయగ్రంథి శ్ఛిద్యన్తే సర్వసంశయాః।
క్షీయంతే స్యకర్మాణితస్మిన్ దృష్టేపరావరే"

தா:—அந்தப் பரபிரம்மம் பார்க்கப்பட்டால் மனதில் தேகாத்ம பிரமரூபமான அஞ்ஞான பந்தம் பேதிக்கப்படுகின்றது. எல்லா சந்தேகங்களும் சேதிக்கப்படுகின்றன. இந்த விஞ்ஞானியின் கருமங்களெல்லாம் நசிக்கின்றன.

"తత్రకో మోహః కఃశోక ఏకత్వమను పశ్యతః"

தா:—அத்விதீயமான ஏகமானதைப் பார்க்கின்றவனுக்கு அந்தப் பிரமத்தில் சோகமோகங்களில்லை.

“యేపూర్వం దేవాఋషయ శ్చతం
విదు స్తేషాంముక్తి శ్శాశ్వతీ నేతరేషాం”

தா:—பூர்வத்திலெந்த தேவதைகளெந்த ரிஷிகள் அந்த ப்பரமாத்துமாவை யறிந்தார்களோ அவர்களுக்கு நீடித்த முக்தி அன்னியர்களுக்கில்லை.

ஸ்மிருதிகள்.

“సర్వంజ్ఞాన ప్లవేనై వవృజినం సన్తరిష్యసి”

தா:—ஞானமென்கின்ற தெப்பத்தினால் எல்லா பாவங் களையுந் தாண்டக்கூடும்.

“జ్ఞానాగ్ని సర్వకర్మాణి భస్మసాత్కురుతే తథా
ఏతద్బుద్ధ్వా బుద్ధిమాన్స్యాత్ కృతకృత్యశ్చభారతా”

தா:—பிரமகியான மென்னு மக்கினி எல்லா கருமங் களையும் சாம்பலாக்குகின்றது. ஓ அர்ச்சுனா மனிதன் பிரம சுரூபத்தை அறிந்து புத்திமானும், கிருதகிருத்தியனுமாகின் றான்:

“తద్ధ్యగ్రం సర్వవిద్యానాం ప్రాప్యతే హ్యమృతం తతః।
ప్రాప్యైతత్ కృతకృత్యోహిద్విజో భవతినాన్యథా॥

தா:—எல்லா வித்தைகளிலும் ஆத்மகியானம் மேலா னது, அதினால் ஜீவன் முக்தியடைகின்றான். பிராமணனிந்த பிரமஸ்வரூபத்தை யடைந்தே கிருதகிருத்தியனாகின்றானே யொழிய வேறு விதத்தினாலல்ல.

“కర్మణాబుధ్యతే జన్తుర్విద్యయాచవిముచ్యతే।
తస్మాత్కర్మనకుర్వంతి యతయః పారదర్శినః॥

தா:—ஜந்துவானது கருமத்தினால் கட்டப்படுகின்றது. ஞானத்தினால் பந்தமோக்ஷமாகின்றது. ஆகையால் பிரம தரிசனஞ் செய்யப்பட்டவர்களான யோகிகள் கருமங்களைச் செய்யார்.

"క్షేత్రజ్ఞస్యేశ్వరజ్ఞానాద్విశుద్ధిః పరమామతా।
అయన్తుపరమోధర్మో యద్యోగేనాత్మదర్శనం॥

தா:—ஜீவனுக்கு ஈசுவரனை யறிவதினால் பரிசுத்தத்தை யடைதல் உத்தமமாய் அங்கீகரிக்கப்படுகின்றது. ஞானத்தினால் ஆத்துமதரிசனஞ் செய்தலெதுவோ அதுவே உத்தம தருமம்.

"ప్రజయా కర్మణా ముక్తిర్ధనేన సచసతాంసహి।
త్యాగేనైకేన ముక్తిస్స్యాత్తదభావే భ్రమన్త్యహో॥

தா:—சந்தானத்தாலும் கருமத்தினாலும் தனத்தினாலும் முக்திகிடையாது. ஒன்றாகிய சன்னியாசத்தினால் மோக்ஷமுண்டு. அப்படிப்பட்ட சன்னியாசமில்லாமையினால் ஜீவர்கள் சமுசாரத்தில் பிரமித்துக்கொண்டிருக்கிறார்கள்? ஆச்சரியம்!

ஓம் தத்ஸத்.

முக்திசோபனம் நாலாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

